# இவரது அன்பு மனைவிக்கு ஒரு சேலை வாங்க விரும்புகிறார். நான்கு மில்களைப் பற்றிய சிந்தனை இவருக்கு உண்டு.

## எந்த மில் இவரது விருப்பத்தை நிறைவேற்றும்?

லக்ஷ்மி. இல்லத்தரசிக்கு ஏற்ற புடவையைத் தேர்ந்தெடுப்பதில் ஓர் ஆடவனுக்கு உள்ள அக்கறையை லக்ஷ்மி அறிந்து வைத்துள்ளது. ஆகையால்தான் அழகான புடவைகளைத் தயாரித்து வழங்குகிறது.

பாலரீனா புடவைகள் லக்ஷ்மியின் அரிய படைப்பு. பாலரீனா வாயில் புடவைகளைத் தினசரியும் உடுத்தலாம்; விசேஷங்களுக்கும் அணியலாம். பாலரீனா பிரிண்டட் புடவைகள் மனைவியையும் மணாளனையும் ஒருங்கே மன மகிழ்விப்பவை.

அடுத்த முறை உங்கள் மனைவிக்குப் புடவை வாங்கச் செல்லும்போது பாலரீனா புடவைகளைத் தவறாமல் கேட்டுப் பார்வையிடுங்கள். அல்லது லக்ஷ்மி விற்பனை நிலையத்துக்கு விஜயம் செய்யுங்கள்.

உங்களது விருப்பத்துக்கேற்ற விதவிதமான துணிகளை லக்ஷ்மி வழங்குகிறது — உங்கள் மனைவி உங்களது ரசனையைக் கண்டு பாராட்டுத் தெரிவிக்கும் வகையில்.

**லக்ஷ்மியின்**

**பாலரீனா® புடவைகள்**





ஸ்ரீ
லக்ஷ்மி
மில்ஸ்
கம்பெனி லிமிடெட்
கோயமுத்தூர்

FDS LM 2606A TAM



காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய ஸ்வாமிகள்.

# நன்றி

விஜயதசமி திருநாளன்று இச்சிறப்பு மலரை அன்னை சரஸ்வதி தேவியின் திருவடிகளில் சமர்ப்பித்து ஆசி வேண்டி நிற்கிறோம்.

இம்மலரின் முகப்பை அலங்கரிக்கும் அழகான கொலு பொம்மைகளைப் படம் பிடித்து வெளியிட அன்புடன் இசைந்த குறளகத்திலுள்ள காதி கிராப்ட் ஜெனரல் மானேஜர், மானேஜர் ஆகியோருக்கு எங்கள் உளமார்ந்த நன்றி உரித்தாகும்.

விஜயதசமி மலருக்கு விளம்பரங்கள் கொடுத்துதவிய வணிக நிறுவனங்களுக்கு எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

இம்மலரில் காணப்படும் கட்டுரைகளின் ஆசிரியர்களுக்கும் பிரசுரகர்த்தாக்களுக்கும் எங்கள் மனமார்ந்த நன்றி.

இம்மலரைச் சிறப்பாக அச்சிட்டுக் கொடுத்த ஸ்ரீமதி அச்சகத்தினருக்கும் வள்ளிமயில் ஆப்செட் பிரிண்டர்சுக்கும் எங்கள் நன்றி உரித்தாகும்.

* * *



## கவிச்சேரி சுப்பராய சாஸ்திரிகள்

இவ்வாண்டு விஜயதசமி திருநாளன்று ஸ்ரீ மஹாலக்ஷ்மி டிரஸ்ட் வேத ஆகம பிரபந்த பாடசாலை பெஸன்ட் நகரில் துவக்கப்பட்டது.

கவிச்சேரி சுப்பராய சாஸ்திரிகள் தமக்குச் சொந்தமான 11 கிரவுண்டு நிலத்தை மனமுவந்து இவ்வரும் பணிக்கு நன்கொடையாக அளித்தார்.

ஸ்ரீ மஹாலக்ஷ்மி கோவிலின் அர்ச்சகர்களுக்கு இருப்பிடமும், வேத ஆகம பிரபந்த பாடசாலையும் இங்கு அமைக்கப்பட்டு விஜய தசமி திருநாளன்று துவக்கப்பட்டது.

எளிமையான இத்துவக்க விழாவினிற்கு முன்னுள் சென்னை ஷெரீப் திரு. என். ராமகிருஷ்ணன் அவர்கள் வருகை தந்து சிறப்பித்தார்.



வேத பாடசாலைக்கு பெருமாளும் தாயாரும் எழுந்தருளும் காட்சி.



வேத பாடசாலை துவக்க விழாவின்போது வருகை புரிந்த
கவிச்சேரி சுப்பராய சாஸ்திரி தம்பதிகளை ஸ்ரீ மஹாலக்ஷ்மி ட்ரஸ்டின் மேனேஜிங் ட்ரஸ்டி
ஸ்ரீ முக்கூர் ஸ்ரீநிவாஸவரதாசாரியர் பூர்ண கும்ப மரியாதையுடன் வரவேற்றார்.



வேத பாடசாலை துவக்க விழாவினுக்கு விஜயதசமி திருநாளன்று வருகை புரிந்த சென்னை நகர முன்னாள் ஷெரீப் திரு. ராமகிருஷ்ணன் அவர்களை பூர்ண கும்ப மரியாதைகளுடன் வரவேற்கிறார் மானேஜிங் டிரஸ்டி திரு. முக்கூர் ஸ்ரீநிவாஸ வரதாசாரியர்



திரு. ராமகிருஷ்ணன் அவர்களுக்கு மாலை அணிவிக்கப்படும் காட்சி




வேத ஆகம பாடசாலை வாயிலில்,
இடம் கொடுத்துதவிய கவிச்சேரி சுப்பராய சாஸ்திரிகள் குடும்பத்தினருடன்
திரு. முக்கூர் ஸ்ரீநிவாஸ வரதாச்சாரியர் தம்பதிகள்

<u>தீபாவளி மலரில் :</u>

மிக அரிய நூலான

# லக்ஷ்மி ஸஹஸ்ரம்

ஸ்லோகங்களின் ஒரு பகுதி பிரசுமாகிறது

அனைவரும் படித்துப் பயன்படுமாறு கேட்டுக் கொள்ளப்படுகின்றனர்

॥ श्रीः ॥

# ॥ श्रीसूक्तम् ॥

# ஸ்ரீஸூக்தம்.

ஸ்ரீ உ. வே. வித்வான் முக்கூர், உபன்யாஸ கேஸரி,
ஸ்ரீநிவாஸ வரதாச்சாரியர் ஸ்வாமி

---

हिरण्य वर्णां हरिणीं सुवर्णरजतस्रजाम् ।
चन्द्रां हिरण्मयीं लक्ष्मीं जातवेदो ममावह ॥ १ ॥

ஹிரண்யவர்ணும் ஹரிணீம் ஸுவர்ணரஜதஸ்ரஜாம் –
சந்த்ராம் ஹிரண்மயீம் லக்ஷ்மீம் ஜாதவேதோ மமாவஹ ॥

## பதவுரை

ஜாதவேத :-ஓ அக்நிபகவானே; அல்லது ஓ விஷ்ணுவே; ஹிரண்யவர்ணும்–தங்கம்போன்ற நிறம் வாய்ந்தவளும், ஹரிணீம்-பாபத்தைப் போக்குகிறவளும், ஸுவர்ணரஜத ஸ்ரஜாம் – பொன், வெள்ளி இவைகளை மாலையாகத் தரித்தவளும், சந்த்ராம் - ஸகல ஜநங்களையும் களிப்பிக்குமவளாயும், ஹிரண்மயீம் - ஹிரண்யத்தை அதாவது தங்கத்தை உருவமாக உடையவளாயும், லக்ஷ்மீம் – எல்லோரும் ஆசைப் படுபவளாயும், இருக்கிற தேவியை, மம – எனக்கு, ஆவஹ–கொடுக்கவேண்டும்.

அத்வைத மதத்தைச் சேர்ந்த பலரும், விசிஷ்டாத்வைத மதத்தைச் சேர்ந்த பலரும் வியாக்யாநம் செய்திருக்கிறார்கள். ஆனால் இவ்விருவகையினர்களுக்கும் ஏதோ சிற்சில பதங்களில் மாத்திரம் மாறுபொருள் இருக்கிறதேயன்றி மொத்தக் கருத்தில் வித்தியாசம் தென்படவில்லை. ஜாதவேத: என்னும் பதத்திற்கு அத்வைதிகள் அக்நி என்றும் விசிஷ்டாத்வைதிகள் விஷ்ணு என்று பொருளும் கூறுகிறார்கள். விசாரித்துப் பார்க்குமளவில் இருதரத்தார்க்கும் இருவகையான பொருளும் விரோதிக் காது. இந்த ஸ்ரீசூக்தம் ஸம்பந்தப்பட்டவரை எல்லா மதக்காரரும் ஒற்றுமையாகவே இருக்கிறார்கள் என்று சொல்வது பொருந்தும்.

ஆரோக்யத்தை சூர்யனிடமிருந்தும், ஐச்வர்யத்தை அக்நியினிடமிருந்தும், அறிவை சிவனிடமிருந்தும், மோக்ஷத்தை விஷ்ணுவினிடமிருந்தும் பெறவேணும் என்று ஸ்மிருதிகள் கூறுகின்றன. அதை அநுசரித்து ஜாதவேத: என்னும் பதத்திற்கு அக்நி என்றார் சிலர். விசிஷ்டாத்வைத மதத்தின்படி விஷ்ணுவைத் தவிர்த்து மற்ற தெய்வங்களை பஜிப்பது உசிதமல்லவாதலால் அவர்கள் ஜாதவேத: என்னும் பதத்திற்கு விஷ்ணு என்று பொருள் கூறினர். பணம் காசு இவைகளை மாத்திரம் லக்ஷ்மீ என்று கூறுவதில்லை. உலகத்தில் உள்ள ஒவ்வொரு பொருளிலும் ஒவ்வொரு சிறப்பு உண்டு.

899

அவை அனைத்தையும் இங்கு லக்ஷ்மீ என்று கூறுகிறது. தைத்திரீய ப்ராம்மணத்தில் சிங்கம், புலி, ஸர்ப்பம், அரசன், குதிரை, எருது, மேகம், வாயு, முதலிய வஸ்துக் களில் தனித்தனியே விளங்கும் சக்தி, ஒளி, இவைகளை எனக்குத் தரவேணும் என்று ப்ரார்த்தனை சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் இங்கு, லக்ஷ்மீ என்னும் பதத்திற்கு இதரர் பார்த்து ஆசைப்படக்கூடியதும், தனக்குத்தானே களிப்பை உண்டாக்கக் கூடியதுமான ஓர் சக்திவிசேஷம் என்று பொருள் கூறுவது தகும். அப்படிப்பட்ட லக்ஷ்மீயை எனக்குத் தரவேணும் என்று ப்ரார்த்திக்கிறது இந்த மந்த்ரம்.

तांम आवह जातवेदो लक्ष्मीमनपगामिनीम् ।
यस्यां हिरण्यं विन्देयं गामश्वं पुरुषानहम् ॥ २ ॥

தாம்ம ஆவஹ ஜாதவேதோ லக்ஷ்மீமநபகாமிநீம் ।
யஸ்யாம்ஹிரண்யம்விந்தேயம் காமச்வம் புருஷாநஹம் ॥

ஜாதவேத: ஓ அக்நி பகவானே; அல்லது ஓ விஷ்ணுவே; யஸ்யாம் – எந்த லக்ஷ்மீ என்னிடம் இருந்தால், அஹம் – நான், ஹிரண்யம் – தங்கம்போன்ற விலை உயர்ந்த வஸ்துவையும், காம் – பசுக்களையும், அச்வம் – குதிரை முதலிய வாஹநங் களையும், புருஷாந் – சிஷ்யர் புத்திரர் முதலிய புருஷர்களையும், விந்தேயம் – அடை வேனோ! தாம் லக்ஷ்மீம் – அந்த லக்ஷ்மீயை, மே – என்னைவிட்டு, அநபகாமிநீம் – பிரியாதவளாக; ஆவஹ – செய்தருளவேணும்.

மக்களைப்பெற்று மகிழ்வர் என்று ஆண்டாள் அருளிச் செய்த பிரகாரம், தைத்திரியோபநிஷத்தில் யுவாஸ்யாத் ஸாதுயுவாத்யாயக: என்று சொன்னதுபோலும், மனிதர் பூலோகத்தில் அநுபவிக்கக்கூடிய ஆனந்தத்தைத் தரவேணும் என்று பிரார்த் திக்கிறது இந்த மந்திரம். காம் என்னும் பதத்திற்கு பசு, பூமி, வாக்கு, ஒளி, இப்படி பல பொருட்கள் உண்டு. அவை எல்லாவற்றையும் இங்கு பொருள்படுத்தலாம். ஐச்வர்யம் ஒரே இடத்தில் நிலைத்திருப்பதில்லை. அப்படி இல்லாமல் ஹிரண்யம் முதலான ஐச்வர்யங்கள் என்னிடத்தில் நிலைத்து நிற்கும்படி அருள் புரியவேணும் என்று பிரார்த்திக்கிறது இந்த மந்த்ரம். அநபகாமிநீம் லக்ஷ்மீம்-சாச்வதமாய் அதாவது அழிவற்றதான ஐச்வர்யத்தை என்றால், மோக்ஷம் அதாவது பரமபதம் என்பர் சிலர். பரமபதம் சென்ற பிறகு ஒரு ஜீவனுக்கு பூமியில் அநுபவிக்கக்கூடிய இன்பங்களில் ஆசையுண்டாகுமானால் இவனுடைய ஸங்கல்பத்தாலேயே எல்லா இன்பங்களும் இவ னுக்குத் தோன்றுகின்றன என்று உபநிஷத்துக்களில் கூறியிருக்கிறது. அப்படிப்பட்ட மோக்ஷாநந்தத்தை எனக்குத் தரவேணும் என்றும் அர்த்தம் உண்டு.

अश्वपूर्वां रथमध्यां हस्तिनाद प्रबोधिनीम् ।
श्रियं देवीमुपह्वये श्रीर्मा देवी जुषताम् ॥ ३ ॥

அச்வபூர்வாம் ரதமத்யாம் ஹஸ்திநாத ப்ரபோதிநீம் ।
ஸ்ரீயம் தேவீமுபஹ்வயே ஸ்ரீர்மா தேவீ ஜுஷதாம் ॥

அரசர்களுடைய ராஜ்யலக்ஷ்மீயைப் பற்றிச் சொல்லுகிறது இது. அச்வ பூர்வாம் - முன்னே செல்லுகிற குதிரைகளை உடையவளும், ரதமத்யாம்—நடுவில் ஓடுகிறதேர்களை உடையவளும் ஹஸ்திநாத ப்ரபோதிநீம் – யானைகளின் கர்ஜனையால்

தன்னுடைய மகிமையை இதரர்களுக்கு அறிவிக்குமவளும், இப்படிப்பட்ட, ஶ்ரீயம் தேவீம் – ஶ்ரீதேவியை, உபஹ்வயே – என்னிடத்திற்கு கூப்பிடுகிறேன் ; ஶ்ரீ:தேவீ – அனைவருக்கும் புகலிடமான லக்ஷ்மீதேவி, மா – என்னை ; ஜுஷதாம்-அடையக் கடவள், அல்லது திருப்தி செய்யக்கடவள்.

அச்வ என்னும் பதத்திற்கு எங்கும் பரவி நிற்பவன் அதாவது பரமாத்மா என்று பொருளும் உண்டு. அப்போது ஶ்ரீபகவான் செல்லுகிற இடங்களுக்கெல்லாம் தானும் செல்லுமவள். ஒவ்வொரு அவதாரத்திலும் கூடச்சென்று இரஹஸ்யமாகவோ, ஸதஸ்ய மாகவோ பகவான் செய்யும் லீலைகளுக்கு ஸஹகாரியாய் அதாவது ஸகாயம் செய் யுமவள். ரதமத்யாம் – சரீரத்தை ரதம் என்று உபநிஷத்துக்களில் கூறியுள்ளது. இங்கு பகவானுடைய திருமேனியின் நடுவே வசிப்பவள் என்று அர்த்தம். அவன் திருமுக மண்டலத்தில் கோபம் அணுக வொட்டாமல் பாதுகாப்பதன் பொருட்டு அந்த திருமுக மண்டலத்திற்கு அருகில் வசிக்குமவள், ஹஸ்திநாதப்ரபோதிநீம் – கஜேந்த்ர மோக்ஷோபாக்கியாநத்தில் முதலையால் நோவுபட்டு கூப்பிடுகிற யானையின் தீநஸ் வரத்தை பகவான் செவியுற்று அதை ரக்ஷிக்கும்படி செய்தவள். ஶ்ரீ என்னும் பதத் திற்கு பல பொருள்கள் உண்டு. பக்தர்கள் துக்கத்தைப் போக்குபவள், பக்தர்களை இரக்ஷிப்பதற்காக பகவானை அடைந்திருப்பவள், அனைவராலும் ஆச்ரயிக்கப் பட்டவள். பரமபதத்தில் நித்யவாஸம் பண்ணுபவள். பகவானுடைய திருமார்பை விட்டுப் பிரியாதவள் இன்னும் பல உண்டு. அவைகளை ஶ்ரீதேசிகன் அருளிச்செய்த சதுச்லோகீ பாஷ்யத்தில் காண்க.

कांसोस्मितां हिरण्यप्राकारामार्द्रां ज्वलन्तीम् तृप्तां तर्पयन्तीम्।
पद्मेस्थितां पद्मवर्णाम् त्वामिहोपह्वये श्रियम् ॥ ४ ॥

காம் ஸோஸ்மிதாம் ஹிரண்யப்ராகாராம்
ஆர்த்ராம் ஜ்வலந்தீம் திருப்தாம் தர்ப்பயந்தீம் ॥
பத்மேஸ்திதாம் பத்மவர்ணாம்
த்வாமிஹோபஹ்வயெ ஶ்ரீயம் ।

காம் – இன்பத்தையே உருவமாக உடையவளாயும், அல்லது பரமாத்ம ஸ்வரூ பிணியாய், அல்லது இப்படிப்பட்டவள் என்று சொல்லுவதற்கு அரியதான நிலைமையை உடையவளாயும், ஸோஸ்மிதாம் – எப்போதும் மந்தஹாஸத்தோடு கூடியவளாயும், ஹிரண்ய ப்ராகாராம் – சுவர்ணமயமான ப்ராகாரத்தை உடையவளாயும் அல்லது சுவர்ணமயமான திருமேனியை உடையவளாயும், ஆர்த்ராம்-யானைகள் திருமஞ்சனம் செய்யும்போது நனைந்த திருமேனியை உடையவளாயும், ஜ்வலந்திம் – பக்கமெங்கும் பரவுகிற காந்திகளால் பிரகாசிப்பவளும், த்ருப்தாம்-ஒன்றுலொன்று குறைவில்லா தவளும், தர்ப்பயந்தீம்-தன்னைப்போல் தனது பக்தர்களையும் பரிபூர்ணர்களாகச் செய் கிறவளும், பத்மேஸ்திதாம்-தாமரைப்பூவில் வசிப்பவளும், பத்மவர்ணாம் – தாமரை போன்ற நிறமுடையவளும், ஶ்ரீயம் த்வாம் – ஶ்ரீ என்ற திருநாமத்தை உடையவளுமான உம்மை, இஹ – இவ்விடத்திற்கு, எனது ஸமீபத்திற்கு, உபஹ்வயெ – அழைக்கிறேன்.

ஶ்ரீ வேதாந்த தேசிகன் அருளிச்செய்த ஶ்ரீஸ்துதியில் பதிமூன்றுவது ,ச்லோ கத்தில் ஶ்ரீ மகாலக்ஷ்மிக்கு திக்கஜங்கள் திருமஞ்சனம் செய்துவைத்ததை விஸ்தார

மாய் கூறியிருக்கிறது. அதை இங்கு அநுசந்திப்பது உசிதம். தேவர்களும் அசுரர்களும் திருப்பாற்கடலைக் கடையும்போது, பிராட்டி, பெருமாளுடைய திருமார்பை அடைந்து தானும் திருப்தியடைந்து தேவர்களையும் திருப்திசெய்து வைத்தவள் என்ற வரலாற்றையும் இங்கு கருத்தில் சேர்த்துக்கொள்க.

चन्द्रां प्रभासां यशसा ज्वलन्तीं श्रियं लोके देवजुष्टामुदाराम् ।
तां पद्मनेमीँ शरणमहं प्रपद्येऽलक्ष्मीर्मेनश्यतां त्वां वृणे ॥ ५ ॥

சந்த்ராம் ப்ரபாஸாம் யசஸாஜ்வலந்தீம்
ஸ்ரீயம்லோகே தேவஜுஷ்டாமுதாராம் ।
தாம் பத்மநேமீம் சரணமஹம் ப்ரபத்யே
அலக்ஷ்மீர்மே நச்யதாம் த்வாம் வ்ருணே ॥

சந்த்ராம் - பக்தர்களைக் களிப்பிக்குமவளாய், ப்ரபாஸாம்-விசேஷமான ஒளியால் எங்கும் ப்ரகாசிப்பவளாய், லோகே - எல்லாவுலகங்களிலும், யசஸா-கீர்த்தியால், ஜ்வலந்தீம்-விளங்குகிறவளும், ஸ்ரீயம் - பக்தர்களைத் தானாகவே வந்து அடையும் ஸ்வபாவமுள்ளவளும், தேவஜுஷ்டாம் - தேவதைகளால் ஸேவிக்கப்பட்டவளும் அதாவது - துர்வாஸ முனியின் சாபத்தால் மூன்று உலகங்களும் வருந்தும்போது திருப்பாற்கடலில் நின்று அவதரித்த ஸ்ரீமகாலக்ஷ்மியை தேவர்கள் அனைவரும் தங்களது மனைவிகளை முன்னிட்டுக் கொண்டு சரணமடைந்தார்கள் என்ற கதையை இங்கு அநுஸந்திக்க. உதாரம்-உதாரகுணம் நிறைந்தவளாயும் - அதாவது பக்தர்களுடைய விருப்பத்தின்படி அவர்களுக்கு உபகாரம் செய்தும், தான்செய்தது போதாது என்று நினைக்குமவள் அல்லது ஜனங்கள் வேறுகதி யற்றிருப்பதைக்கண்டு அவர்கள் விரும்பாவிடினும் விலக்காமையையே பற்றாசாகக் கொண்டு அவர்களை இரக்ஷிக்குமவள். இராமாயணத்தில் சீதை இராக்ஷஸ ஸ்த்ரீகளை இரக்ஷித்ததை இங்கு உதாரணமாகக்கொள்க. பத்மநேமீம்-சக்கிரம்போல் வட்டமான தாமரைப்பூவைக் கையில் தரிப்பவளும், பாத்மபுராணத்தில் ஸப்தலோகங்களையும் பத்மத்தின் உருவமாய் கூறியிருக்கிறது. ஏழு உலகங்களையும் தனது கையில் தரிக்குமவள் என்று கருத்து. அல்லது பகவான் தனது ஆச்ரிதர்களை இரக்ஷிப்பதற்கு உருப்பாக சக்கிரத்தை கையில் தரிப்பதுபோல் இவள் தனது பக்தர்களை, துயரம்போக்கி அருள்புரிவதற்கு உருப்பாக கையில் தாமரையை தரிக்கிறாள் - என்னவுமாம், தாம்-வேதங்களிலும் இதிஹாஸ புராணங்களிலும் ப்ரசித்தமான மகிமையை உடைய தேவியை, அஹம் - நான், - சரணம் ப்ரபத்யே-சரணமடைகிறேன். மே-என்னுடைய அலக்ஷ்மீ: தாரித்ர்யம் அதாவது வறுமை, நச்யதாம் - ஒழியக்கடவது, த்வாம் - உம்மை, வ்ருணே - ப்ரார்த்திக்கிறேன், எனக்கு அருள்புரியுமாறு வேண்டுகிறேன்.

आदित्यवर्णे तपसो धिजातो वनस्पतिस्तव वृक्षोथविल्वः ।
तस्य फलानितपसानुदन्तु मायान्तरायाश्च वाह्या अलक्ष्मीः ॥ ६ ॥

ஆதித்யவர்ணே தபஸோதிஜாதோ வநஸ்பதிஸ்தவ வ்ருக்ஷோதபில்வ -
தஸ்ய பலாநி தபஸாநுதந்து மாயாந்தராயாச்ச பாஹ்யா அலக்ஷ்மீ: ॥

ஆதித்யவர்ணே - சூரியனைப்போல் காந்தி நிறைந்தவளே. தவ-உம்முடைய, தபஸ: - அநிக்ரஹத்தினுல், வநஸ்பதி:-பூவில்லாமல் பழம் உண்டாகிற, பில்வ:- பில்வம் என்ற, வ்ருக்ஷ:-மரம், அதிஜாத:-உண்டானது, அத - ஆகையால், தஸ்ய - அந்த மரத்தினுடைய, பலாநி - பழங்கள், தபஸா - உம்முடைய அநுக்ரஹத்தினுல், ஆந்தரா: - மனதில் இருக்கிறவும், யாச்ச - எவை, பாஹ்யா: - மனதுக்குப் புறப்பே இருக்கின்றவுமான, மாயா: - அஜ்ஞானங்களையும், அலக்ஷ்மீ: - வறுமைகளையும், நுதந்து - போக்கக்கடவன. பில்வமரத்திற்கு ஸ்ரீ வ்ருக்ஷம் என்றும், பில்வப்பழத்திற்கு ஸ்ரீ பலம் என்றும் பெயர். பில்வமரங்கள் ஸ்ரீலக்ஷ்மீதேவியின் அம்சங்கள் வாய்ந்தவை என்று சாஸ்த்ரங்களின் கொள்கை. உம்முடைய அநுக்ரஹம் வாய்ந்த அந்தப் பழங்களின் மூலமாய் என்னுடைய அறிவின்மையும் வறுமைகளையும் போக்கி என்னை இரக்ஷித்தருள வேணும்.

## उपैतुमां देवसखः कीर्तिश्च मणिनासह।
## प्रादुर्भूतोस्मि राष्ट्रेस्मिन् कीर्तिमृद्धिं ददातु मे॥ ७॥

**உபைதுமாம் தேவஸக: கீர்த்திச்ச மணிநாஸஹ |**
**ப்ராதுர்பூதோஸ்மி ராஷ்ட்ரேஸ்மிந் கீர்த்திம்ருத்திம் ததாது மே ||**

தேவஸக:- தேவர்களிடத்தில் அன்பு வாய்ந்த விஷ்ணுவும், கீர்த்தி: - புகழும், மணிநாஸஹ - இரத்நங்களோடேகூட, மாம் - என்னை, உபைது - அடையக் கடவன, அஸ்மிந் - இந்த, ராஷ்ட்ரே - தேசத்தில், ப்ராதுர்பூதோஸ்மி - பிறந்திருக்கிறேன், கீர்த்திம் - கீர்த்தியையும், ருத்திம் - ஐச்வர்யத்தையும், மே - எனக்கு, ததாது - நீ கொடுக்க வேண்டும்.

இந்த லோகத்தில் பிறந்திருக்கிறேன் என்பதால், ஐச்வர்யத்தாலும் கீர்த்தி-யாலும் பல விதங்களான இன்பங்களை அநுபவிக்கக் கருதி இங்கு ஜநித்திருக்கிறேன். உன்னுடைய அருளையே நாடி நான் இவ்வுலகில் தோன்றியிருப்பதால் என்னுடைய பிறப்பை பயன்படச் செய்ய வேணும் நீர் என்று கருத்துத் தோன்றும். உம்முடைய அருள் இல்லையாகில் இவ்வுலகில் ஜநித்தது வீண் ஆகும் ஸர்வேச்வரனுகிய பகவானும் உம்முடைய அருள் வாய்ந்தவனுக்கே ஸகாயம் செய்ய முன்வருவான் என்று கருத்து. இங்கு தேவஸக:, என்னும் பதத்திற்கு குபேரன் என்றும், கீர்த்தி:, என்னும் பதத்திற்கு குபேரனுடைய பணப் பெட்டி என்னும், மணி, என்னும் பதத்திற்கு நினைத்த பொருட்கள் எல்லாவற்றையும் கொடுக்கும் சிந்தாமணி, என்னும் இரத்னசிலை என்றும் பொருள் கூறி, அவை எல்லாம் என்னை அடையக் கடவன என்பது சில வியாக்யாநங்களின் கொள்கை.

## क्षुत्पिपासामलां ज्येष्ठाम् अलक्ष्मीं नाशयाम्यहम्।
## अभूतिमसमृद्धिञ्च सर्वां निर्णुद मे गृहात्॥ ८॥

**க்ஷுத்பிபாஸாமலாம் ஜ்யேஷ்டாம் அலக்ஷ்மீம் நாசயாம்யஹம் |**
**அபூதிமஸம்ருத்திம்ச ஸர்வாம் நிர்நுத மே க்ருஹாத் ||**

க்ஷுத் - பசி, பிபாஸா - தாஹம், இவையாகிய மலாம் - பீடையை பண்ணுகிற, ஜ்யேஷ்டாம் - பெரியவளான, அலக்ஷ்மீம் - அலக்ஷ்மீ என்னும் தேவியை, அஹம் - நான், நாசயாமி - நாசம் செய்கிறேன். உமது அநுக்ரஹத்தை அடைந்து அதன் பலத்தால் அலக்ஷ்மீ தேவியை என்னை விட்டுப் போகும்படிச் செய்கிறேன். ஸர்வாம் - ஸகலவிதமான, அபூதிம் - தாரித்ரயத்தையும் அதாவது வறுமையையும், அஸம்ருத்திம்ச - மேன்மேலும் வளரவொட்டாமல் விரோதிக்கும் நிலையையையும், மே-என்னுடைய, க்ருஹாத் - வீட்டிலிருந்து, நிர்னுத - நீர் அகற்றவேணும்.

அபூதி என்னும் பதத்திற்கு அஜ்ஞானம் என்னும் பொருள் கூறுவதுண்டு. ஸகலவிதமான குறைகளுக்கும் அறிவின்மையே காரணம். ஆதலால் அப்படிப்பட்ட அஜ்ஞானத்தை என்னை விட்டு நீக்கவேணும் என்பது இதன் முக்கியக் கருத்து.

गन्धद्वारां दुराधर्षां नित्यपुष्टां करीषिणीम् ।
ईश्वरीँ सर्वभूतानां त्वामिहोपह्वये श्रियम् ॥ ९ ॥

கந்தத்வாராம் துராதர்ஷாம் நித்யபுஷ்டாம் கரீஷிணீம் ॥
ஈச்வரீம் ஸர்வ-பூதாநாம் த்வாமிஹொபஹ் வயேஶ்ரீயம் ॥

கந்தத்வாராம் - நல்ல பரிமளத்ரவ்யங்களை தான் வருவதற்கு மார்க்கமாகக் கொண்டவளும், அதாவது நல்ல பரிமளமுள்ள த்ரவ்யங்கள் உள்ள இடத்தில் லக்ஷ்மீ வாஸம் செய்கிருள் என்றுகருத்து. துராதர்ஷாம்-ஒருவராலும் அவமதிக்கப் படாதவளும் அல்லது அசுத்தமான மனிதர்களால் அடைய முடியாதவளும், நித்யபுஷ்டாம்- எப்போதும் எப்பொருட்களாலும் நிறைவுற்றவளும், கரீஷிணீம் கரீஷிணீ என்று திருநாமம் வாய்ந்தவளும், ஸர்வ பூதாநாம், எல்லா ப்ராணிகளுக்கும், ஈச்வரீம் - நாயகியாயும், ஶ்ரியம் - அனைவராலும் ப்ரார்த்திக்கப்படுகிற, த்வாம் - உம்மை, இஹ - இங்கு உபஹ்வயே - அழைக்கிறேன். என்னிடம் நித்யவாஸம் செய்யும்படி உம்மை கூப்பிடுகிறேன்.

मनसः काममाकूतिं वाचस्सत्यमशीमहि ।
पशूनां रूपमन्नस्य मयि श्रीः श्रयतां यशः ॥ १० ॥

மநஸ: காமமாகூதிம் வாச:ஸத்யமசீமஹி ।
பஶூநாம் ரூபமந்நஸ்ய மயிஶ்ரீ ச்ரயதாம் யச: ॥

மநஸ: - மனதினுடைய, காமம் - விருப்பத்தையும், அதாவது மனத்தினல் விரும்பப்பட்ட பொருட்களையும், ஆகூதிம் - ஸந்தோஷத்தையும், வாச: - வாக்கினுடைய, ஸத்யம் - உண்மையையும் அதாவது, எனது வாக்கிலிருந்து புறப்படும் வார்த்தைகள் எல்லாம் ஸத்யமாயிருக்கும்படியும், அசீமஹி - அடைவோம், பெறக்கடவோம். பஶூநாம் - பசுக்களுடையவும், அந்நஸ்ய - உணவு பொருட்களுடையவும், ரூபம் - பற்பலவிதமான உருவத்தையும், யச: - கீர்த்தியையும், அச்மஹி - அடையக்கடவோம், மயி - என்னிடத்தில், ஶ்ரீ: - லக்ஷ்மீ தேவியானவள், ச்ரயதாம்-நித்யவாஸம் செய்யவேணும்.

இலக்ஷ்மீ கடாக்ஷம் பெற்றவனுடைய உயர்ந்த நிலைமையைக் கூறுகிறது இந்த மந்த்ரம். அவன் மனத்தில் நினைப்பதெல்லாம் கைகூடும். எப்பொழுதும் ஆனந்தம் உண்டாகும். அவன் சொல்லுவதெல்லாம் உண்மையாகவே தீரும். ருசியுள்ள உணவுகளை சாப்பிடுவதற்கு முக்கியமாய் வேண்டிய பசுக்களும் அவனிடத்தில் நிறைந்திருக்கும். உலகத்தில் புகழ் பரவும். இவையெல்லாம் இலக்ஷ்மீ கடாக்ஷத்திற்கு அடையாளங்கள் ஆகும்.

कर्दमेन प्रजाभूता मयिसंभव कर्दम ।
श्रियं वासय मे कुले मातरं पद्ममालिनीम् ॥ ११ ॥

கர்த்தமேந ப்ரஜாபூதா மயி ஸம்பவ கர்தம |
ஸ்ரீயம் வாஸய மே குலே மாதரம் பத்மமாலிநீம் ||

கர்தமேந - கர்தம ப்ரஜாபதி என்னும் மஹரிஷியாலே, ப்ரஜாபூதா - புத்ரவதி ஆனுள் அதாவது கர்தம ப்ரஜாபதியை புத்திரனுகப் பெற்ருள். ஹே கர்தம - ஓ கர்தமனே ! மயி - என்னிடத்தில் ஸம்பவ வாஸம் செய், பத்மமாலிநீம் - தாமரைப் பூமாலையை தரித்துக் கொண்டிருக்கிற, மாதரம் - உனது தாயாராகிய, ஸ்ரீயம் - ஸ்ரீதேவியை, மே குலே - எனது விட்டில், வாஸய : வசிக்கச் செய்.

ஆதிகாலத்தில் நான்முகன் உலகங்களை சிருஷ்டிக்கும் போது முதன் முதல் மரிசி முதலாக பத்து மஹரிஷிகளைப் படைத்தார். பத்தில் ஒருவர் கர்தமர். அவர் இலக்ஷ்மியினுடைய அம்சம் வாய்ந்தவர், லக்ஷ்மீபுத்திரனை கர்தமர் ஸ்வாயம்புவ மநுவின் பெண்ணுகிய தேவஹூதியை மணந்து ருசி, கலா, முதலிய ஒன்பது பெண்களை யும் கபில மஹரிஷியையும் பெற்ருர் என்பது புராணக்கதை. ஸ்ருஷ்டி கர்த்தர்களில் ஒருவராகிய கர்தமர் என்னிடத்தில் அருள் புரிந்து லக்ஷ்மியை எனது கிருஹத்தில் வசிக்கச் செய்யக்கடவர் என்று ப்ரார்த்தனை.

அல்லது, கர்தமரின் பெண்கள் ஒன்பதில் க்யாதி, என்பவள் ஒருத்தி. அவளை கர்தமர் ப்ருகு மஹரிஷிக்கு கல்யாணம் செய்து கொடுத்தார். அந்த க்யாதிக்கும் ப்ருகு மஹரிஷிக்கும் புதல்வியாக ஸ்ரீ மகாலக்ஷ்மி அவதரித்தாள் என்பது விஷ்ணு புராணத்தின் கதை, அதை அநுசரித்து லக்ஷ்மியின் அவதாரத்திற்கு மூலகாரணமாகிய கர்தமரை துதி செய்கிறது இந்த மந்த்ரம் என்று சொல்வதிலும் விரோதம் இல்லை.

आपःसृजन्तु स्निग्धानि चिक्लीत वस मे गृहे ।
निचदेवीं मातरं श्रियं वासय मे कुले ॥ १२ ॥

ஆபஸ்ஸ்ருஜந்து ஸ்நிக்தாநி சிக்லீத வஸ மே க்ருஹே |
நிச தேவீம் மாதரம் ஸ்ரீயம் வாஸய மே குலே ||

சிக்லீத - ஓ சிக்லீதரே, சிக்லீதர் என்பவர் ஸ்ரீ மகாலக்ஷ்மியின் துவாரபாலர் களில் ஒருவர் என்று புராணங்களில் கூறப்பட்டிருக்கிறது. வித்யாரண்யர் தனது பாஷ்யத்தில் சிக்லீதர் என்பவர் லக்ஷ்மிதேவிக்குப் புதல்வர் என்று கூறுகிருர். முன் மந்த்ரத்தில் சொன்ன கர்தமருக்கே சிக்லீதர் என்று ஒரு பெயர் உண்டு என்றும் சொல்

வதுண்டு. ஆப:- ஜலங்கள், ஸ்நிக்தாநி - நெய், தயிர், பால் முதலிய பசையுள்ள வஸ்துக்களை, ஸ்ருஜந்து - ஸ்ருஷ்டிக்கட்டும், மே - என்னுடைய, க்ருஹே - கிருஹத்தில் வஸ - வசிக்க வேண்டும், தேவிம் - தனது ஒளியால் எப்போதும் ப்ரகாசித்துக் கொண்டிருக்கிற, மாதரம் - எனக்குத் தாயான, ஸ்ரியம் ஸ்ரீ தேவியை, மே - என்னுடைய, குலே - க்ருஹத்தில், நிவாஸய - வசிக்கச் செய்யவும்.

आर्द्रां पुष्करिणीं पुष्टिं पिङ्गलां पद्ममालिनीम् ।
चन्द्रां हिरण्मयीं लक्ष्मीं जातवेदो ममावह ॥ १३ ॥

ஆர்த்ராம் புஷ்கரிணீம் புஷ்டிம் பிங்களாம் பத்மமாலிநீம் ।
சந்த்ராம் ஹிரண்மயீம் லக்ஷ்மீம் ஜாதவேதோமமாவஹ ॥

ஆர்த்ராம் - நனைந்தவளும், திருபாற்கடலைக் கடைந்தபோது பிராட்டி அவதரிக்கையில் பெருமாள் திருமுன்பே தாமரை மலரால் செய்யப்பட்ட ஆஸனத்தில் அவள் வீற்றிருக்க திக்கஜங்கள் துதிக்கைகளால் தங்கக் குடங்களை ஏந்தி அபிஷேகம் செய்வித்தன என்பது புராணக்கதை. அந்த அபிஷேகத்தால் நனைந்த திருமேனியை உடையவள் அல்லது தயையினால் நனைந்த ஹ்ருதயத்தை உடையவள் என்றும் சொல்லக் கூடும். புஷ்கரிணீம் - தாமரைப்பூவில் வாஸம் செய்கிறவளும், புஷ்டிம் - நிறைவுக்கு அபிமானி தேவதையாயிருக்கிற, அதாவது நிறைந்திருப்பதே லக்ஷ்மீ தேவியின் உருவம் என்று கருத்து பிங்களாம் - பொன் நிறமுள்ளவளும், பத்மமாலிநீம் - தாமரைப் பூமாலையை தரித்தவளும், சந்த்ராம் - சகல ஜந்துக்களையும் ஆநந்திப்பிக்குமவளும், ஹிரண்மயீம்-சுவர்ணம் போல் பரிசுத்தமான திருமேனியை உடையவளும், லக்ஷ்மீம்-ஸ்ரீ மகாலக்ஷ்மியை, ஜாதவேத:- ஓ பகவானே, மம - எனக்கு, ஆவஹ - வரவழைத்துக் கொடும்.

புஷ்கரிணீம் என்னும் பதத்திற்கு, புஷ்கரம் என்று ஆகாசத்தைச் சொல்லி, அதன் மூலமாய் பக்தர்களின் ஹ்ருதயத்தைச் சொல்லி, பக்தர்களின் ஹ்ருதயத்தில் வசிக்குமவள் என்றும் பொருள் கூறப்படும்.

आर्द्रां यः करिणीम् यष्टिं सुवर्णां हेममालिनीम् ।
सूर्यां हिरण्मयीं लक्ष्मीं जातवेदो ममावह ॥ १४ ॥

ஆர்த்ராம் ய:கரிணீம் யஷ்டிம் ஸு॰வர்ணாம் ஹேமமாலிநீம் ।
ஸூர்யாம்ஹிரண்மயீம் லக்ஷ்மீம் ஜாதவேதோ மமாவஹ ॥

ஜாதவேத:- ஓ பகவானே ! ஆர்த்ராம் - அமிருதத்தினால் நனைந்த திருமேனியை உடையவளாயும், ய:கரிணீம் - செங்கோலுக் கடையாளமாக தண்டாயுதத்தைக் கையில் தரிப்பவளும், யஷ்டிம - ஊன்றுகோலைப் போல் மெல்லிய திருமேனியை உடையவளாயும், ஸு॰வர்ணாம் - கண்களுக்கு ஆனந்தகரமான திருமேனி நிறத்தை உடையவளாயும், ஹேமமாலிநீம் - தங்கத்தினால் செய்யப்பட்ட பூமாலையை உடையவளும் ஸூர்யாம் - ஸூர்யனைப் போல் ப்ரகாசிக்கிறவளும், ஹிரண்மயீம் - தங்கம் முதலிய விலையுயர்ந்த வஸ்துக்களை தனது உருவமாகக் கொண்டவளும், இப்படிப்பட்ட, லக்ஷ்மீம் - லக்ஷ்மீதேவியை, மம - எனக்கு, ஆவஹ - வரவழைத்துத் தரவேணும், என்னை விட்டுப் போகாமல் நித்யவாஸம் செய்யும்படி கிருபை பண்ணவேணும்.

तां म आवह जातवेदो लक्ष्मीमनपगामिनीम् ।
यस्यां हिरण्यं प्रभूतं गावोदास्योश्वान् विन्देयं पुरुषानहम् ॥ १५ ॥

தாம்ம ஆவஹ ஜாதவேதோ லக்ஷ்மீமநபகாமிநீம் |
யஸ்யாம் ஹிரண்யம்ப்ரபூதம் காவோதாஸ்யோச்வாந் விந்தேயம் புருஷாநஹம் ॥

ஜாதவேத:– ஓ பகவானே! யஸ்யாம் - எந்த லக்ஷ்மீ வாஸம் செய்கையில், ப்ரபூதம் – ஏராளமான, ஹிரண்யம் – பொன் முதலான உயர்ந்த பொருட்களையும், காவ: – பசுக்களையும், தாஸ்ய - தாசிகள் அதாவது அடிமைப் பெண்களையும், அச்வாந் - குதிரைகளையும், புருஷாந் - புத்திரன், பௌத்திரன் முதலான குடும்ப ஜநங்களையும், அஹம் - நான், விந்தேயம் - அடைவேனோ, தாம் - அப்படிப்பட்ட, லக்ஷ்மீம் - ஸ்ரீ மகாலக்ஷ்மியை, மே - என் பொருட்டு, அநபகாமிநீம் - என்னை விட்டுப் போகாமல் இருக்கும்படி, ஆவஹ – கூப்பிடவேணும்.

पद्मप्रिये पद्मिनि पद्महस्ते पद्मालये पद्मदलायताक्षि ।
विश्वप्रिये विष्णुमनोनुकूले त्वत्पादपद्मं मयि सन्निधत्स्व ॥

பத்மப்ரியே பத்மிநி பத்மஹஸ்தே பத்மாலயே பத்மதளாயதாக்ஷி |
விச்வப்ரியே விஷ்ணுமநோநுகூலே த்வத்பாத பத்மம் மயி ஸந்நிதத்ஸ்வ ॥

பத்மப்ரியே - தாமரைப் பூவினிடத்தில் பிரியமுள்ளவளே; பத்மிநி - தாமரைப் பூக்களுக்கு சொத்துக்காரியாயும் இருப்பவளே! பத்மஹஸ்தே! – தாமரைப் பூவைக் கையில் தரித்தவளே! பத்மாலயே - தாமரைப் பூவில் வசிப்பவளே; பத்மதள – தாமரை இதழ் போல், ஆயுத - நீண்ட, அக்ஷி – கண்களை உடையவளே! விச்வப்ரியே!– உலகத்துள்ள ஜநங்களால் விரும்பப்பட்டவளே! விஷ்ணு மநோநு கூலே - விஷ்ணு வின் மனத்திற்கு அநுகூலமாய் - அதாவது விரோதமின்றி இருப்பவளே; த்வத்பாத பத்மம் - த்வத் – உன்னுடைய, பாதபத்மம் - தாமரை மலர் போன்ற திருவடியை, மயி – என்னிடத்தில், எனது தலைமேல் ஸந்நிதத்ஸ்வ - எப்போதும் இருக்கச் செய்யக் கடவீர்.

श्रियै जातः श्रियआनिर्याय श्रियंवयो जनितृभ्यो ददातु ।
श्रियं वसाना अमृतत्व मायन् भजन्ति सद्य समिधा मिधय्यून् ॥

ஸ்ரீயை ஜாத: ஸ்ரீய ஆநிர்யாய ஸ்ரீயம்வயோ ஜநித்ருப்யோ ததாது |
ஸ்ரீயம் வஸாநா அமிருதத்வமாயந் பஜந்தி ஸத்ய ஸமிதா மிதத்யூந் ॥

ஸ்ரீயை ஜாத: - லக்ஷ்மீதேவியின் விலாஸார்த்தமாக ஸ்ருஷ்டிக்கப்பட்ட இந்த உலக மானது, ஸ்ரீய: – ஐச்வர்யங்களை, ஆநிர்யாய - ப்ரகாசப்படுத்தக் கடவது. ஜநித்ருப்ய: -. ஸம்ஸாரத்தில் ஜநித்தவர்களுக்கு, ஸ்ரீயம் – ஸகலவிதமான ஐச்வர்யத்தையும், வய:–வயதையும், அதாவது நீண்ட ஆயுளையும், ததாது–கொடுக்கக் கடவது, ஸ்ரீயம்- லக்ஷ்மீதேவியை, வஸாநா: - உபாஸனை செய்கிறவர்கள். அம்ருதத்வம் – ஜநநம் மரணம் இல்லாத, ப்ரும்மாநந்தத்தை, ஆயந் - அடைவார்கள். ஸத்ய: - இன்றைக்கும்,

மிதத்யுந், நாளைக்கும், அதாவது எப்போதும், ஸமிதா–ஸ்வயம் ப்ரகாசமான நிலையை, அதாவது ப்ரக்ருதியோடு கலக்காமல் சுத்தாத்ம ஸ்வரூபத்தை, பஜந்தி – அடைகிறார்கள். இகலோகத்தில் புத்திர பச்வாதிகளான ஐச்வர்யத்தையும், கைவல்யத்தையும், பகவதநுபவம் என்று சொல்லப்படுகிற மோக்ஷத்தையும் அடைவர்.

श्रियएवैनं ताच्छ्रियामादधाति ।
सन्ततमृचावषट्कृत्यं सन्धत्तं सन்धीयते प्रजया पशुभिः ।
य एवं वेद ।

ஸ்ரீய: ஏவைநம் தச்ச்ரியாமாததாதி।
ஸந்ததம் ருசா வஷட்க்ருத்யக்ம் ஸந்தத்தக்ம் ஸந்தீயதெ ப்ரஜயாபசுபி:–
யஏவம் வேத॥

ய: – எவனொருவன், ஏவம்–இம்மாதிரி, வேத – அறிகிறானோ, அதாவது இந்த ஸ்ரீ சூக்தத்தை அத்யயநம் செய்கிறானோ. ஏநம் – இவனுக்கு, ஸ்ரீய: ஏவ – ஐச்வர்யங்களே, தச்சிரியாம்–ஐச்வர்யங்களால் உண்டாகக் கூடிய மற்ற ஐச்வர்யங்களையும், அதாவது ஐச்வர்ய பரம்பரைகளை, ஆததாதி – உண்டு பண்ணுகின்றன, ஸந்ததம் – எப்போதும், ருசா – இந்த ரிக்வேத கிலமான ஸ்ரீ சூக்தத்தைக் கொண்டு, வஷட்க்ருத்யம், – ஹோம கார்யங்களை, ஸந்தத்தம் – செய், அப்படிச் செய்பவன், ப்ரஜயா – புத்ரஸந்தாநத்தோடும், பசுபி: – பசுக்களோடும், ஸந்தீயதே – சேர்க்கப்படுகிறான். அதாவது ஸகலவித ஐச்வர்யங்களையும் அடைகிறான்.

ओम् महादेव्यैच विद्महे विष्णुपत्न्यै च धीमहि ।
तन्नो लक्ष्मीः प्रचोदयात् ॥

ஓம். மகாதேவ்யை ச வித்மஹே விஷ்ணுபத்ந்யை ச தீமஹி।
தந்நோ லக்ஷ்மீ: ப்ரசோதயாத்॥

ஓம் – ஸ்ரீ மகாவிஷ்ணு, லக்ஷ்மீதேவி, இவ்விருவர்களைச் சேர்ந்தவை இவ்வுலகங்கள் அனைத்தும். மஹாதேவ்யைச–தேவர்களுக்குப் பெரிய தேவதையான பிராட்டியை, வித்மஹே – உபாஸனை செய்கிறோம், விஷ்ணு பத்ந்யைச – விஷ்ணுவின் பத்நியை, தீமஹி – த்யாநம் செய்கிறோம். லக்ஷ்மீ: – லக்ஷ்மீ தேவியானவள், ந: – நம்முடைய, தத் – அந்த லக்ஷ்மியை உபாஸனை செய்வதற்குரிய அறிவை, ப்ரசோதயாத்– தூண்டிவிடவேண்டும். அதாவது அந்த உபாஸனை நிறைவேறுமாறு எனக்கு புத்தி சக்தியைத் தந்தருளவேணும்.

மேற்சொன்ன மந்த்ரத்திற்கு லக்ஷ்மீ காயத்ரி எனப் பெயர். காயத்ரி மந்த்ரத்தைப் போலவே இதற்கும் விசேஷ மகிமை உண்டு. இதையும் தினந்தோறும் ஜபிப்பது மிகவும் நன்று. இதன் விசேஷார்த்தங்கள் வேத பாஷ்யங்களில் காண்க.

ஸ்ரீஸூக்தம் முற்றிற்று.

## பூ ஸூக்தம்

भूमिर्भूम्ना द्यौर्वरिणान्तरिक्षं महित्वा ।
उपस्थे ते देव्यदितेऽग्निमन्नाद्यायाय दधे ।

பூமிர்பூம்நா த்யௌர்வரிணாந்த ரிக்ஷம் மஹித்வா ।
உபஸ்தே தேதேவ்யதிதே க்நிமன்னுத மந்நாத்யாயாதததே ॥

தேவி - ஓ பூதேவியே! பூம்நா - விஸ்தாரத்தினுல், பூமி: - பூமியாகவும், வரிணா - எல்லாப்பொருளிலும் மேன்மை பெற்றிருப்பதால், த்யௌ: - ஸ்வர்க்காதி களான மேல்லோகங்களாகவும், மஹித்வா - மஹிமையால், அந்தரிக்ஷம் - ஆகாய மாகவும், இருக்கிறீர். அதிதே - அகண்டலோக, ஸ்வரூபியானவளே, தே - உம் முடைய, உபஸ்தே - ஸமீபத்தில், அந்நாதம் - அன்னத்தை புசிக்கவேணும் என்ற ஆசைகொண்ட அக்நிம் - இந்த சரீரத்தை முன்னே கொண்டுபோகிற இந்த ஜீவாத் மாவை, அந்நாத்யாய - இஷ்டப்படி அன்னத்தை புசிப்பதன்பொருட்டு, ஆததே - உம் மிடத்தில் அர்ப்பணம் செய்கிறேன்.

இந்த மந்த்ரம் பூமிதேவியை ஸ்தோத்திரம் செய்கிறது. பூமி, ஆகாயம், ஸ்வர்க்கம், என்று மூவகைப்பட்ட லோகங்களும் உம்மிடத்திலிருந்து உண்டானவை. பலவிதமான இன்பங்களை அநுபவிக்கக் கூடியவனுன இந்த ஜீவனை, அளவற்றதான பேரின்பத்தை அநுபவிப்பதன் பொருட்டு உம்மிடத்தில் அர்ப்பணம் செய்கிறேன். நீர் இவனுக்கு மேற்சொன்ன மூன்று உலகங்களில் இருக்கும் இன்பங்களைத் தந்து முடிவில் மோக்ஷானந்தத்தையும் கொடுத்து இரக்ஷிக்கவேணும். பூமி, என்னும் பதம், இம் மண்ணுலகத்தை மாத்திரம் சொல்லுகிறது என்பது உண்மையானுலும், பூதேவி என்னும் தேவதை, மண்ணுலகம், விண்ணுலகம், ஆகாயம், இவைகளுக்கு அதிஷ்டாந தேவதை என்று புராணங்களில் கூறப்பட்டிருப்பதால், இந்த மந்த்ரம் அப்படிப்பட்ட தேவதையை ஸ்துதிக்கிறது என்று முன்னேர்கள் வியாக்யாநம் செய்திருக்கிறுர்கள்.

आयङ्गौः प्रश्निरक्रमीदसनन्मातरं पुनः ।
पितरञ्च प्रयन्त्सुवः ॥

ஆயங்கௌ: ப்ரச்நிரக்ரமீத ஸநந்மாதரம் புந: ।
தரஞ்ச ப்ரயந்த்ஸுவ: ॥

கௌ: - ஓ பூமி தேவியே! ப்ரச்நி: - சூர்யன், ஆயந்-வேகமாயும் ஓய்வு இல்லா மலும் ஓடிக்கொண்டு, மாதரம்-எல்லா உலகங்களுக்கும் தாயாகிய உன்னை, அக்ரமீத் -

சுற்றிவருகிருன், ப்ரதக்ஷிணம் செய்கிருன். புந: - பின்னேயும், ஸுவ: - ஸ்வர்க்க லோகத்தையும், ப்ரயந்-சுற்றுகிறவனுய், பிதரம் - எல்லா வுலகங்களுக்கும் தகப்பனுரான ஸ்ரீமந் நாராயணனே, அஸநத்-தனது உள்ளே வைத்திருக்கிருன். ஜகத்காரண பூதஞன ஸ்ரீமந் நாராயணன் சூரியமண்டலத்தினுள் வசிக்கிருன். அந்த பகவானுடைய சக்தியே சூரியனுடைய ப்ரகாசமாய் தோன்றுகிறது.

அப்படிப்பட்ட மகிமைவாய்ந்த சூரியபகவானும் பூதேவியை தினந்தோறும் ப்ரதக்ஷிணம் செய்கிருன். தாயை ப்ரதக்ஷிணம் செய்வது புத்திரனது கடமையன்ரோ? ஆகையால் சூரியன் தனது தாயாகிய உன்னே ப்ரதிக்ஷிணம் செய்கிருன் ஒரு புதல்வன் தனது தகப்பனுடைய விசேஷமான அன்பு வாய்ந்திருந்த போதிலும் தாயை தகப்பனுரைக் காட்டிலும் நூறுமடங்கு அதிக பக்தியுடன் பூஜிக்க வேணும் என்பதற்கு சூரிய பகவான் திருஷ்டாந்தம் என்று கருத்து.

त्रिꣳशद्धाम विराजति वाक्पतङ्गाय शिश्रिये ।
प्रत्यस्य वहद्युभिः ॥

த்ரிம்சத்தாம விராஜதி வாக்பதங்காய சிச்ரியே |
ப்ரத்யஸ்ய வஹத்யுபி: ||

த்ரிம்சத் - முப்பது, தாம - முகூர்த்தங்களிலும், விராஜதி - சூர்யன் ப்ரகாசிக்கிருன். வாக் - வேதவாக்கானது, பதங்காய - சூரியனிடத்தில், சிச்ரியே - ஆச்ரயித்து நிற்கிறது. அதாவது ஆதாரமாய்க்கொண்டு நிற்கிறது. சூரியனே வேதஸ்வரூபி என்று வேதங்களும், சாஸ்த்ரங்களும் கூறுகின்றன. த்யுபி: - தன்னுடைய கிரணங்களால், ப்ரதி - என்னுடைய பிரதிகூலங்களே அதாவது பாபம், மலம், வியாதி, முதலிய விரோதிகளே அஸ்ய - விலக்கிவிடும், வஹ - என்னே கார்யங்களேச் செய்யுமாறு நடத்தியருளவேணும்.

சூரியன் பூமியை பிரதக்ஷிணம் செய்வதனுல் உண்டாகும் நன்மைகளேக் கூறுகிறது இந்த மந்த்ரம். சூரியனுடைய கதியைக் கொண்டு ஒரு தினத்தை முப்பது முகூர்த்தங்களாகப் பிரிக்கிறோம். பிரித்து காலத்திற்கு ஏற்றவாறு பல செயல்களேச் செய்கிறோம். ஸகலவிதமான அறிவுக்கும் நிதியாகிய வேதம் சூரியபகவானிடம் இருக்கிறது. நம்முடைய ஸகலவிதமான துன்பங்களேயும் போக்கிக்கொண்டு சூர்ய பகவான் செல்லுகிருர்.

अस्य प्राणादपानत्यन्तश्चरति रोचना ।
व्यख्यन्महिषस्सुवः ॥

அஸ்யப்ராணுதபாநத்யந்தச் சரதி ரோசநா |
வ்யக்யந் மஹிஷஸ்ஸுவ: ||

அஸ்ய - இந்த சூரியனுடைய, ரோசநா - காந்தியானது, ப்ராணுத் - ச்வாஸம் விடுகை என்ற பிராணவாயுவின் வியாபாரத்தைச் செய்துகொண்டு, அபாநதி-சரீரத்தி

லுள்ள வாயுவை கீழ்முகமாய் செலுத்துகிற அபாநவாயுவின் வியாபாரத்தைச் செய்து, அந்த: - ஸமஸ்த ப்ராணிகளின் சரீரத்தினுள், சரதி - ஸஞ்சாரம் செய்கிறது. மஹிஷ: - மிகப்பெரிய மண்டலத்தில் வசிக்கிற இந்த சூர்யபகவான், ஸுவ: - சௌந்தர்யத்தை, வ்யக்யத் - ப்ரகாசப் படுத்துகிருன்.

ஸகல ஜீவராசிகளுடைய சரீரத்தினுள் ஐந்து வாயுக்கள் ஸஞ்சரிக்கின்றன. அவைகளுக்கு ப்ராணம், அபாநம், வ்யாநம், உதாநம், ஸமாநம், எனப்பெயர்.

ப்ராணவாயு ச்வாஸரூபமாய் வெளிவிடுகிறது. அபாநம் - ஹ்ருதயத்திற்குக் கீழ் பாகத்தில் இருந்துகொண்டு ஆகாரத்தின் மலபாகங்களை கீழ்நோக்கிச்செலுத்து கின்றது. வ்யானம் - கால்முதல் தலைவரை ஸர்வ சரீரத்திலும் பரவி நின்றுகொண்டு ஸர்வவித உணர்ச்சிகளை முற்றும் பரவச் செய்கிறது. ஸமாநம் - என்னும் வாயு வயிற்றில் இருக்கும் ஜாடராக்நியை ஜ்வலிப்பித்து சாப்பிட்ட ஆஹாரங்களை ஜீர்ண மாகும்படி செய்கிறது. உதாநம் - என்னும் வாயு கழுத்தில் இருந்து வார்த்தை சொல்லு வதற்குப் பலவிதமான ஒலிகளை வெளிப்படுத்துகின்றது. இந்த மந்தரத்தில் ப்ராணம் அபாநம் என்ற இரண்டு வாயுவின் வ்யாபாரத்தை மாத்திரம் சொல்லி இருந்தாலும் இதுபோலவே மற்ற வாயுக்களையும் சொன்னதாக கருத்துக் கொள்ளவேண்டியது. இந்த ஐந்துவிதமான வாயுக்கள் வேலைசெய்வது சூர்யனுடைய சக்தியைக்கொண்டு என்று தத்வ சாஸ்த்ரங்களில் கூறப்பட்டிருக்கிறது. சூர்யனுக்கும் இவ்விதமான சக்தி யையும் ப்ரகாரத்தையும் உண்டாக்கியது பரமாத்மாவாகிய ஸ்ரீமந் நாராயணனே சூர்ய ரூபியாய்தோன்றி ஜீவராசிகளுக்கு ஜீவிக்கும் வழியை செய்துகொண்டு ஆகாசத்தில் விளங்குகிருர் என்று இதன் தாத்பர்யம்.

यत्वाक्रुद्धः परोवपमन्युना यदवर्त्या ।
सुकल्पमग्ने तत्तव पुनस्त्वोद्दीपयामसि ॥

யத்வாக்ருத்த: ப்ரோவப மந்யுநா யதவர்த்யா ।
ஸுகல்பமக்நே தத்தவ புநஸ்த்வோத்தீபயாமஸி. ॥

அக்நே - ஓ பரமாத்மாவே! அவர்த்யா : சக்தியில்லாமையால், த்வா – உம்மை, உம்மிடத்தில், க்ருத்த: - கோபித்துக்கொண்டு, மந்யுநா - கோபத்தாலே, பரோவப - த்யாநம் செய்யாமலும் பூஜிக்காமலும் விட்டுவிட்டேன். யத்தத் என்ற இதுவும், தவ - உம்முடைய அநுக்ரஹத்தால் ஸுகல்பம் - ஒழுங்காய் செய்ததாகவே ஆகவேணும். புந: - மறுபடியும், த்வா - உம்மை, உத்தீபயாமஸி - ஜ்வலிக்கச் செய்கிரேம் அதாவது ஸந்தோஷப் படுத்துகிரேம்.

சக்திக்குறைவினுலோ, வறுமையினுலோ, ஆலஸ்யத்தினுலோ, உம்மை பஜிக் காமல் நான் விட்டதை மன்னித்து உம்மை பூஜித்ததாகவே எண்ணி என்னை இரக்ஷித் தருள வேணும் என்று ப்ராத்திக்கிறது இந்த மந்த்ரம்.

यत्तेमन्यु परोप्तस्य पृथिवीमनुदध्मसे ।
आदित्या विश्वेतद्देवा वसवश्चसमाभरन् ॥

யத்தே மந்யுபரோப்தஸ்ய ப்ருதிவிமநு தத்மஸே ।

ஆதித்யா விச்வேதத் தேவாவஸவச்ச ஸமாபரந் ॥

மந்யு - கோபத்தாலே, பரோப்தஸ்ய - விடப்பட்டதே உம்முடைய, யத் - எந்த தேஜஸ்ஸானது, ப்ரதி விமனு - பூமியை நோக்கிச் சென்று, தத்மஸே - லயத்தை அடைந்ததோ, அதாவது மறைந்து விட்டதோ தத் - அந்த தேஜஸ்ஸை, ஆதித்யா: - பனிரண்டு சூர்யர்களும், விச்வே தேவா: - விச்வே தேவர்களும், வஸவச்ச – எட்டு வசுக்களும் ஸமாபரந் - பரித்தார்கள் அதாவது தாங்கிக் கொண்டார்கள்.

மந்யு என்னும் சொல்லுக்குக் கோபம் என்ற அர்த்தம் ஆனாலும் இங்கு காமம், கோபம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் என்ற ஆறு தோஷங்களையுப் பொருளாக கொள்வது உசிதம். இவ்வாறுக்குள் நம்முடைய புத்தியைக் கெடுப்பதற்கு கோபத்திற்கு அதிக சக்தியுண்டு. அதனால் கோபத்தை மாத்திரம் எடுத்தது ஓ பரமாத்மாவே! கோபம் முதலான துர்குணங்களால் உம்மை நான் த்யாநம் செய்யாமல் விட்டு விட்டேன். ஆகையால் உம்முடைய ஞானம் சக்தி முதலான சக்திகள் அனைத்தும் என்னிடத்தில் பயன்படாமல் போகவே பூமியிற் சென்றது. அந்த சக்திகளையே சூர்யன் விச்வேதேவர்கள் அஷ்ட வசுக்கள் இவர்கள் தரிக்கிறார்கள். அதாவது உம்மை த்யாநம் செய்து, பூமியில் விடப்பட்ட உம்முடைய சக்திகளை அவர்கள்வாங்கிக் கொண்டார்கள். இந்த பூதேவியின் கிருபையால் நான் உம்முடைய சக்தியை அடையக்கடவேன் என்று பொருள்.

मेदिनीदेवी वसुन्धरास्याद्वसुधा देवी वासवी ।
ब्रह्मवर्चसः पितृणां श्रोत्रं चक्षुर्मनः ॥

மேதிநீதேவி வசுந்தரா ஸ்யாத்வ ஸுதா தேவி வாஸவீ ।

ப்ரம்மவர்ச்சஸ: பித்ருணும் ச்ரோத்ரம் சக்ஷுர்மன ॥

வாஸவீ - ஸமஸ்த பூதங்களுக்கும் வசிப்பதற்கு இடத்தைத் தருகிற, தேவீ – தன்னிடத்தில் வசிக்கும் ப்ரஜைகளுக்கு இன்பத்தைக் கொடுக்கிற, வஸுந்தரா - இரத்நம், பொன் முதலான உயர்ந்த பொருள்களை தரிக்கிற வஸுதா - தாய் போல் ஸமஸ்த வஸ்துக்களையும் வளரச் செய்கிற, மேதிநீதேவி - பூதேவியானவள் ஸ்யாத் - என்னிடத்தில் வசிக்கக் கடவள் அல்லது கிருபை செய்க.

பித்ருணும் - என்னை இரக்ஷிக்கிறவர்களுக்கு ப்ரம்மவர்சஸ: - ப்ராம்மணுளுக்கு உரிய தேஜஸ்ஸையும், ச்ரோத்ரம - காது, சக்ஷு: - கண், மந: - மனது, முதலிய இந்த்ரியங்களையும் கொடுக்கக் கடவள்.

தன்னைக் காப்பவர்களுக்கு நன்மையை தேடினுல் தனக்குத் தன்னுலேயே வந்து விடுமாகையால், தன்னிடத்தில் உபகாரம் செய்யுமவர்களுக்கு நன்மையை ப்ரார்த்திக்கிறது இந்த மந்த்ரம்.

देवी हिरण्यगर्भिणी देवी प्रसूदरी ।
सदने सत्यायने सीद ॥

தேவி ஹிரண்ய கர்பிணீ தேவிப்ரசூதரீ |

ஸதநேஸத்யாயநே ஸீத ||

தேவி - இவ்வுலகங்கள் அனைத்தையும் விளையாட்டுக் கருவியாகக் கொண்ட பரமாத்மாவுக்கு மனைவியான ஹிரண்ய கர்பிணீ - தங்கம் முதலான சிறந்த வஸ்துக்களை வயிற்றில் வைத்து கொண்டிருப்பவளும், தேவி - அப்படிப்பட்ட தேவனை விளையாடச் செய்யுமவளாயும், ப்ரசூதரீ எல்லாவுலகங்களையும் ப்ரஸவிக்கக் கூடிய வயிற்றை உடையவளுமான நீ, ஸத்யாயநே - அழிவில்லாப் பொருளாகிய பரமாத்மா வசிக்குமிடமான, ஸதநே - எனது மனம் என்னும் வீட்டில், ஸீத - நித்யவாஸம் செய்ய வேணும்.

समुद्रवती सावित्री ह्यनो देवी मह्यगी ।
महोधरणी महोव्यधिष्ठाः शृङ्गेशृङ्गे यज्ञे यज्ञे विभीषणी ।
इन्द्रपत्नी व्यापिनी सुरसरिरिह ॥

ஸமுத்ரவதி ஸாவித்ரீ ஹ்யநோ தேவி மஹ்யகீ | மஹோதரணி மஹோவ்யதிஷ்டா: ச்ருங்கே ச்ருங்கே யஜ்ஞே யஜ்ஞே விபீஷணீ || இந்தர பத்நீ வ்யாபிநீ ஸுரஸரிரிஹ ||

ஸ்முத்ரவதீ - ஸமுத்ரத்தைத் தன்னுள் வைத்திருக்கிற, ஸாவித்ரீ - ஜகத்காரண பூதனை ஸ்ரீமந்நாராயணனுடைய பத்நியான அல்லது ஸமஸ்த வஸ்துக்களையும் ஸ்ருஷ்டிக்கிறவளான தேவி தேவனுடைய பத்நியாகிய நீ ஹே மஹி - ஓ பூமியே, அகீ - உன்னிடத்தில் பிறந்த வஸ்துக்கள் அனைத்தையும், அந: ஹி - ஜீவிக்கச் செய்கிறாய் அல்லவா; மஹோதரணீ - விசேஷமான ஒளியைத் தரிக்கிறவளும், விபீஷணீ - சில விடங்களில் பயங்கரமான உருவத்தை தரிப்பவளும் இந்த்ரபத்நீ - ஸமஸ்த ஐச்வர்யங்களால் விளங்குகிற பரமாத்மாவுக்கு பத்நியான இஹ - இந்த ஜகத்தில், வ்யாபிநி - எங்கும் பரவுகிற ஸ்பாவமுள்ளவளும் ஸுரசரி-தேவர்களால் அடைக்கலமாய் அடையப்பட்டவளுமான நீர் ச்ருங்கே ச்ருங்கே - பர்வத சிகரங்கள் முதலான உயர்ந்த இடங்களிலும் யஜ்ஞே யஜ்ஞே - யாகம் முதலான சிறந்த கார்யங்களிலும், மஹ: - உம்முடைய பெருமையை, வ்யாதிஷ்டா: - வைக்கிறீர். அதாவது ஸமஸ்த காரியங்களுக்கும் ஆதாரமாயிருந்து கொண்டு உலகமனைத்தையும் மேன்மேலும் வளரச் செய்கிறீர்.

वायुमती जलशयिनी श्रियंधाराजासत्यन्धोपरिमेदिनी ।
स्वोपरिधत्तंगाय ॥

வாயுமதீ ஜலசயிநி ஸ்ரீயம்தாராஜா ஸத்யந்தோபரி மேதிநீ |
ஸ்வோபரிதத் தங்காய ||

வாயுமதீ - காற்று முதலான பஞ்சமாபூதங்களுக்கு ஆதாரமாயும், ஜலசயிநீ - ஜலத்தின் மேல் சயநித்துக் கொண்டிருப்பவளும், ஸ்ரீயம் தாரா - ஸகலவிதமான ஐச்வர்யங்களையும் தனது உள்ளத்தில் தரிப்பவளும், அஜா - பிறப்பு இறப்பு முதலான விகுதிகள் இல்லாதவளும், ஸதீ - என்றைக்கும் இருக்கிறவளாயும், அதாவது அழிவற்ற

வளாயும் அந்தோபரி - அறிவில்லாத ப்ராணிகளின் மீது, மேதிநீ - மிகவும் ப்ரீதி வாய்ந்தவளும், அதாவது கருணை கூர்ந்தவளும் இப்படிப்பட்ட நற்குணம் வாய்ந்த பூதேவி அங்காய - நன்மைகளை அடைவிப்பிக்கும் பொருட்டு, ஸ்வோபரி - தன் உருவத்தின் மீது தத்த - எல்லாவுலகங்களையும் தரிக்கிறாள்.

विष्णुपत्नीं महीं देवीं माधवीं माधवप्रियाम् ।
लक्ष्मीप्रियसखीं देवीं नमाम्यच्युतवल्लभाम् ॥

விஷ்ணுபத்நீம் மஹீம் தேவீம் மாதவீம் மாதவப்ரியாம் |

லக்ஷ்மீப்ரியஸகீம்தேவீம் நமாம் யச்யுதவல்லபாம் ||

விஷ்ணுபத்நீம் - ஜகத்ரக்ஷணதிவ்யாபாரங்களில் விஷ்ணுவுக்குத் துணையாயிருப்பவளும் மஹீம் - அளக்க முடியாத உடல் பரப்பை உடையவளும், தேவீம் - பரமாத்மாத்வோடுகூட லீலாரஸத்தை அனுபவிப்பவளும்; மாதவீம்—மது என்னும் அசுரனைக் கொன்ற பகவானுக்கு ப்ரியமனைவியாயும், மாதவப்ரியாம் - பகவான் லீலாரஸத்தை அநுபவிக்கும்போது அதற்கு வேண்டிய கருவிகளைக் கொடுத்து உதவுகிறபடியால் அவனுக்கு மனமுவந்த மனைவியாயும், லக்ஷ்மீ ப்ரிய ஸகீம் - ஸ்ரீ மகாலக்ஷ்மிக்கு இன்ப முற்ற தோழியாயும், அச்யுதவல்லபாம் - சரணமடைந்தவர்களைக் கைவிடேன் என்று உறுதி கொண்ட பகவானிடத்தில் சலுகை வாய்ந்தவளும், அதாவது இவள் எந்த வார்த்தை சொன்னபோதிலும் அதை அவன் தவறாது நிறைவேற்றுவான் என்று அப்படிப்பட்ட செல்வாக்கு வாய்ந்தவளுமான, தேவீம் - பூதேவியை, நமாமி - நான் நமஸ்கரிக்கிறேன்.

ओम् धनुर्धरायै विद्महे सर्वसिध्यै च धीमहि ।
तन्नोधरा प्रचोदयात् ॥

ஓம் தநுர்தராயை வித்மஹே ஸர்வ ஸித்தியை ச தீ மஹி |

தந்நோதராப்ர சோதயாத் ||

தநுர்தராயை - கையில் வில்லைத் தரித்துக் கொண்டிருக்கும் பூதேவியை வித்மஹே - உபாஸனை செய்கிறோம். ஸர்வ ஸித்தியை தியாநித்த மாத்திரத்தில் ஸமஸ்த கார்யங்களையும் கை கூட்டி வைக்கும் இயல்பு வாய்ந்த பூதேவியை, தீமஹி - த்யாநம் செய்கிறோம், தரா - ஸமஸ்த பூதங்களுக்கும் ஆதாரமான பூதேவி, தத் - அவரை த்யானிக்க வல்லமை வாய்ந்த புத்திசக்தியை, ந: - எங்களுக்கு ப்ரசோதயாத் தூண்டி விடவேணும்.

பூதேவியை தியாநிப்பதற்கு பலவிதங்களான உருவுகள் மந்த்ர சாஸ்ரத்தில் கூறப்பட்டன. அவையுள் வில்லும் கையுமான ஒரு உருவம் உண்டு, நம்முடைய மனோரதம் எல்லாம் கைகூடி வருவதன் பொருட்டு அப்படிப்பட்ட வில்லுங்கையுமான உருவத்தை த்யாநிக்கிறோம். எல்லாவற்றிற்கும் ஆதாரமான பூமிதேவி, எங்களுக்கு பரமாத்மாவை த்யாநம் செய்யக் கூடிய ஞானயோகத்தைத் தந்து ரக்ஷித்தருள வேணும் என்று வேண்டுகிறது இந்த மந்த்ரம்.

शृण्वन्ति श्रोणाममृतस्य गोपाम् ।
पुण्यामस्या उपश्रृणोमि वाचम् ।।

ச்ருண்வந்தி ச்ரோணு மம்ருதஸ்ய கோபாம் |

புண்யாமஸ்யா உபச்ருணோமி வாசம் ||

ச்ரோணும் - திருவோணம் என்னும் நக்ஷத்திரத்திற்கு அதிதேவதையான, அல்லது வேதங்களில் பலவிடங்களில் இந்த பூமிதேவியினுடைய மகிமையைப்பற்றி விரிவாய் கூறப்பட்டிருப்பதால் வேதாத்யயநம் செய்யும்போது அனைவருடைய காதில் ஓதப்படுபவளாயும், அம்ருதஸ்ய - மோக்ஷத்தை அல்லது பரமாத்மாவை, கோபாம் - ரக்ஷிக்கிறவளாயும், அதாவது பரமாத்மாவைக்கூட தன்னுள்படுத்திவைக்குமவளாயும், இருக்கிற; பூமிதேவியை, ச்ருண்வந்தி - எல்லாரும் கேழ்க்கிருர்கள். அஸ்யா: - இவள் விஷயமான, புண்யாம் - புண்யமான, வாசம் - சொற்களை, உபச்ருணோமி - எவ்விடத்திலும் ஜநங்கள் கூறக்கேழ்க்கிறேன்.

அமிருதத்தைப்போல் பூதேவி நன்மையைத் தருபவள். அவளை ஸ்துதிப்பது மகா புண்யமாகும். அவளுடைய மகிமையைப்பற்றிச் சொல்லும் சொற்கள் பலவாருய் எனது காதில் விழுந்து என்னை ஸந்தோஷப் படுத்தவேணும்.

महीं देवीं विष्णुपत्नीमजूर्याम् । प्रतोचीमेनाँ हविपायजामः ।।

மஹீம்தேவீம் விஷ்ணுபத்நீ மஜூர்யாம் |

ப்ரதீசீமே நாக்ம்ஹவிஷா யஜாம: ||

மஹீம் - உடல் சிறப்பினுலும் குணச்சிறப்பினுலும் மிகப்பெருமை வாய்ந்தவளும், தேவீம் - உலகமனைத்தையும் எப்போதும் ஸந்தோஷப் படுத்தும் ஸ்வபாவமுள்ளவளாயும், அல்லது எப்போதும் ப்ரகாசித்துக்கொண்டிருக்குமவளும், விஷ்ணுபத்நீம் - விஷ்ணுவுக்கு மனைவியாயும் அஜூர்யாம் - கிழப்பருவமில்லாயல் என்றும் பதினறு வயதாயிருப்பவளாயும், ப்ரதீசீம் - அறிவையே தனக்கு உருவமாகக் கொண்டவளும் அதாவது ஞான ஸ்வருபிணியாயும், இருக்கிற, ஏநாம் - இந்த பூதேவியை, ஹவிஷா - ஹோமம் செய்தற்குரிய வஸ்துக்களைக்கொண்டு, யஜாம: - பூஜிக்கிருேம் அதாவது ஹோமங்களால் ஆராதிக்கிருேம்.

பூமிதேவியை திருப்தி செய்வதன்பொருட்டு சிலஹோமங்கள் அதர்வண வேதத்தில் விதிக்கப்பட்டிருக்கின்றன. அவை சிலயாகங்களைச் சேர்ந்தவை, தனித்தும் ஹோமங்களைச் செய்யலாம். அந்த ஹோமங்களால் பூமிதேவியை ஆராதிக்கிறேன் என்று பிரார்த்திக்கிறது இந்த மந்த்ரம்.

त्रेधा विष्णुरुरुगायो विचक्रमे । महीं दिवं पृथिवीमन्तरिक्षम् ।
तच्छ्रोणैतिश्रव इच्छमाना । पुण्यँ श्लोकं यजमानाय कृण्वती ।।

C

த்ரேதா விஷ்ணுருருகாயோ விசக்ரமே |

மஹீம் திவம் ப்ரதிவீ மந்திரிக்ஷம் |

தச்ரோணைதிச்ரவ இச்சமானா |

புண்யக்ம்ச்லோகம் யஜமானாய க்ருண்வதீ: ||

உருகாய: - பரந்த கீர்த்தியை உடைய, விஷ்ணு: - விஷ்ணுவானவர், மஹீம் - மிகப்பெரிய, திவம்—ஸ்வர்கலோகத்தையும், ப்ருதிவீம் - பூமியையும், அந்தரிக்ஷம், - ஆகாசத்தையும், த்ரேதா - மூன்று ப்ரகாரமாக, விசக்ரமே - அடியளந்தார், அதாவது மூன்று உலகங்களும் அளப்பில் அடங்கும்படி அளந்தார். தத் - அந்த பரமாத்மாவை, ச்ரோணு - திருவோண நக்ஷத்திரத்திற்கு அதிதேவதையாகிய பூதேவியானவள் ச்ரவ: - க்ஷேமத்தை, இச்சமானா - பிரார்த்திக்கப்படுகிறவளாய்க் கொண்டு, யஜமானாய - தன்னை உச்தேசித்து யாகம் செய்கிறவனுக்கு அல்லது பூஜிப்பவனுக்கு, புண்யம் - மிகப்பரிசுத்தமான, ச்லோகம் - கீர்த்தியை, அல்லது கீர்த்திக்கு ஆதாரமான பெருமையை, க்ருண்வதீ - செய்கிறவளாய், ஏதி - அடைகிருள்.

பகவான் தனது திருவடியால் அளந்துவிட்டார் ஆகையால் இந்த பூமி பகவானைச் சேர்ந்ததாய்விட்டது. பூமி பகவானைச் சேர்ந்தது ஆகும்போது பூமியில் உள்ள பொருள்கள் யாவும் பகவானைச் சேர்ந்தவை என்று சொல்லவேண்டியது இல்லை. இந்த நியாயத்தை பகவானுக்கு எடுத்துச் சொல்லி உலகம் அனைத்துக்கும் நன்மையைத்தந்து அருளுமாறு பூமிதேவி பகவானை வேண்டிக் கேட்பதற்காகவே அவள் பகவானிடத்திலேயே வசித்துக்கொண்டிருக்கிருள்.

இச்சமானா என்னும் பதத்திற்கு விரும்புகிறவள் என்னும் பொருள்உண்டு. அப்போது ஜனங்கள் நன்மையை நாடாமல் இருந்தபோதிலும் தன்னுடைய கார்யமாகவே நினைத்து நன்மையைக் கொடுப்பிக்கிருள் என்னவுமாம்.

பூஸூக்தம் முற்றிற்று.

## நீளாஸூக்தம்

गृणाहि। घृतवती सवितराधिपत्यैः पयस्वतीरन्तिराशानो अस्तु।
ध्रुवा दिशां विष्णुपत्न्यघोरास्येशाना सहसो यामनोता॥

க்ருணுஹி | க்ருதவதீ ஸவிதராதி பத்யை: பயஸ்வதீ ரந்திராசாநோ அஸ்து |
த்ருவாதிசாம் விஷ்ணுபத்ந்ய கோரா ஸ்யே சாநா ஸஹஸோயாமநோதா: ||

க்ருணுஹி - ஸ்ரீ நீளாதேவியை ஸ்தோத்திரம் செய். ஸவித: - ஓ பகவானே! யா எந்த நீளாதேவியானவள், திசாம் - திசைகளுக்கு, துருவா - துருவ நக்ஷத்திரம் போன்றவள். துருவ நக்ஷத்திரம் பூமண்டலத்திற்கு நடுவில் இருப்பதாயும், கிழக்கு மேற்கு முதலான திக்குகளுக்கு அதுவே எல்லை என்றும் சொல்வதுண்டு. அதுபோல் நீளாதேவியும் உலகமனைத்தையும் நிலைமை கடக்காமல் காத்து வருகிறாள் என்று கருத்து. விஷ்ணுபத்நீ. விஷ்ணுவுக்கு பார்யை, அதாவது ஜகத் ஸ்ருஷ்டி முதலான வ்யாபாரங்களில் விஷ்ணுவோடு ஸம உரிமைவாய்ந்தவள். அகோரா - கோபமில்லாதவள். தன்னுடைய க்ரீடைகளால் பகவானுக்கு கோபம் வரவொட்டாமல் செய்பவள் - அஸ்ய - இவ்வுலகத்திற்கு, ஈசாநா - ஈச்வரியாயும், ஸஹஸ: - பலத்திற்கு, மநோதா - அதிஷ்டாந தேவதையாயும், ஆசா - அனைவராலும் துதிக்கப் பட்டவளாயும், இருக்கிறாளோ, அப்படிப்பட்ட நீளாதேவி, க்ருதவதீ - தனது ப்ரஜைகளுக்கு நெய் முதலிய உணவு பொருளை கொடுக்குமவளாயும், ஆதிபத்யை: - ப்ரபுத்வங்களால் அதாவது மற்றவர்களுக்கு கீழ்படியாமல் சுதந்த்ரமாயிருக்கும்படியான நிலைமைகளால், பயஸ்வதீ - பால் நிறைந்தவளாயும், அதாவது பசு பாலைக்கறக்குமாப்போல் இன்பங்களை நமக்குத் தருபவளாயும், ந: - நமுக்கு - ரந்தி: - எப்போதும் ஸந்தோஷத்தைத் தருபவளாக, அஸ்து - இருக்கக் கடவள்.

बृहस्पतिर्मातरिश्वोतवायु रसन्तुवानावाता अभिनोगृणन्तु।
विष्टम्भोदिवो धरुणः पृथिव्या अस्येशाना जगतो विष्णुपत्नी॥

ப்ருஹஸ்பதிர்மாதரிச்வோத வாயுஸ்ஸந்துவாநாவாதா அபிநோக்ருணந்து |
விஷ்டம்போதிவோ தருண: ப்ருதிவ்யா அஸ்யேசாநா ஜகதோ விஷ்ணுபத்நீ ||

ப்ருஹஸ்பதி: - பருஹஸ்பதி என்றும் தேவதையும், மாதரிச்வா - ஆகாசத்தில் ஸஞ்சரிக்கின்ற வாயுவும், உத - இன்னமும், வாயு: - நமது சரீரத்தில் ஸஞ்சரிக்கின்ற ப்ராணவாயுவும். ஸந்துவாநா: - நமது சரீரத்தில் பலவிதமான செய்கையை நடத்துகின்ற வாதா: - மற்ற ஸமாநம் வ்யாநம் உதாநம் அபாநம் என்ற வாயுக்களும். திவ: -

தேவலோகத்திற்கு, விஷ்டம்ப: - தூலம்போல் ஆதாரமாய் நிற்பவளும், ப்ரதிவ்யா: - பூமண்டலத்திற்கு, தருண: - தூண்போல் தாங்குகிறவளாயும். அஸ்ய - இந்த ஜகத: - சேதநா சேதந வர்க்கங்களுக்கு ஈசாநர் - அதிபதியாயும், அதாவது தன்னுடைய செங்கோலுக்கு உட்படுத்தி நடத்திவைக்குமவளாயும், விஷ்ணுபத்நீ - விஷ்ணு பத்நீயான நீளாதேவி ஆகிய இவர் அனைவரும், ந: - எம்மை, அபிக்ருணந்து - நான்கு புறத்திலும், ரக்ஷிக்கக்கடவர்.

ஸ்ரீ பகவானுடைய மூன்றாவது நாயகியான நீளாதேவி, பகவான் க்ரீடா ரஸத்தை அநுபவிக்கும்போது அந்தக் ீடையை மேன்மேலும் ரஸ்யமாயிருக்கும்படி செய்கிறவள். ஆகையால் நாமும் எப்போதும் ஸந்தோஷத்துடன் வாழும்படி, அநுக்ரகம் செய்யவேணும் என்று பிரார்த்திக்கிறது இந்த மந்த்ரம்.

நீளாஸூக்தம் முற்றிற்று.



# திருமாலின் தொண்டர்கள்

## பொய்கையாழ்வார்

திருமாலை வழிபட்டு, அவருடைய கல்யாண குணங்களாகிய அமுத வெள்ளத்தில் ஆழ்ந்து களித்தவர்கள் பன்னிரு ஆழ்வார்கள்.

பொய்கையார், பூதத்தார், பேயார், திருமழிசையார், நம்மாழ்வார், மதுரகவி, குலசேகரர், பெரியாழ்வார், ஸ்ரீ ஆண்டாள், தொண்டரடிப் பொடியார், திருப்பாணர், திருமங்கையாழ்வார் ஆகியோரே இச்சிறப்பு மிகுந்த அப்பன்னிருவர்.

திருமாலின் பாத கமலங்களைப் பற்றிச் சரண் புகுந்தால்தான் முக்தி அடைய முடியும் என்பது ஆழ்வார்களின் அசைக்க முடியாத ஆழ்ந்த நம்பிக்கை.

ஆழ்வார்களின் காலத்தில் வைஷ்ணவ சமயம் மறுமலர்ச்சி அடைந்தது என்றால் கொஞ்சமும் மிகையாகாது. இமயம் முதல் குமரிவரை இம்மதம் ஆல்போல தழைத்துப் பரவியது.

இனிய தமிழில் ஆழ்வார்கள் அருளிச் செய்த நாலாயிரத் திவ்யபிரபந்தப் பாசுரங்கள் வேதங்களின் சாரமாகவும், கீதையின் விளக்கமாகவும் அமைந்துள்ளது. தமிழறிஞர்கள் இப்பாசுரங்களைச் சிறந்த தமிழ் இலக்கியமாகப் போற்றி மதிக்கிறார்கள்.

முதலாழ்வார்கள் என்று பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய மூவரை குறிப்பிடுவார்கள். மற்றைய ஆழ்வார்களுக்கு முன் தோன்றிய இம் மூவரும் ஒரே காலத்தவர். கி. பி 7ம் நூற்றாண்டு தொடக்கம் 9ம் நூற்றாண்டு முடிய உள்ள இடைக்காலத்தில் ஆழ்வார்கள் வாழ்ந்தனர்.

''ஐப்பசியி லோணம், அவிட்டம், சதயமிவை
ஒப்பிலா நாள்கள் உலகத்திர்—எப்புவியும்
பேசும்புகழ் பொய்கையார், பூதத்தார், பேயாழ்வார்
தேசுடனே தோன்று சிறப்பால்''

''மற்றுமுள்ள ஆழ்வார்களுக்கு முன்னே வந்துதித்து
நற்றமிழால் நூல் செய்து
நாட்டையுய்த்த பெற்றிமையோர்
என்றும் முதலாழ்வார்கள் என்றும் பெரியவர்க்கு
நின்றது லகத்தே நிகழ்ந்து.''

—உபதேச இரத்தினமாலை.

பொய்கையாழ்வார் காஞ்சிபுரத்தில் ஐப்பசித் திங்களில் திருவோண நட்சத்திரத்தில் தோன்றினார். இவர் பாடிய நூறுபாடல்களின் தொகுப்பு 'முதல் திருவந்தாதி' என்று அழைக்கப்படுகிறது.

தொண்டை நாட்டின் தலைநகரமான காஞ்சி மாநகர் இயற்கை எழில் மிகுந்து, வளம் கொழித்து விளங்கியது. இங்கே சிறப்பு மிகுந்த பல வைஷ்ணவ ஸ்தலங்களும் சிவஸ்தலங்களும் உண்டு. அத்தகைய வைஷ்ணவ ஸ்தலங்களில் திருவெஃகா என்னும் திருத்தலமும் ஒன்று. அங்கே ஒரு அழகான பொய்கை இருந்தது. பிரமன் முதலான தேவர்கள் இத்திருப்பொய்கையில் நீராடி மகிழ்ந்தனர் என்று கூறுவர். தாமரை, அல்லி, குவளை போன்ற மலர்கள் நிறைந்து, இக்குளத்தின் அழகிற்கு அழகு சேர்த்துக் கொண்டிருந்தன.

திருமாலின் பாஞ்சசந்நிய அம்சராய், ஐப்பதித் திங்களின் சிரவணத் திரு நாளில் அப்பொய்கையின் தாமரை மலரில் பொய்கையாழ்வார் தோன்றினர். பொய்கையிற் தோன்றியமையால் இவருக்குப் பொய்கையார் என்ற திருநாமம் காரணப் பெயராய் நிலைத்தது.

கல்வி கேள்விகளில் சிறந்த பாண்டித்தியம் பெற்றூர். உலக வாழ்வில் இவரது மனம் ஈடுபாடு கொள்ளவில்லை. திருமாலின் நாமத்தை உச்சரித்து, அவரது திருவுருவைத் தரிசித்து, எம்பெருமானின் பால் பக்தி செலுத்திய பொய்கையாழ்வார், சதா அவர் நினைவிலேயே கசிந்து உருகினர். நாராயணன் நாமத்தைச் சொல்வதிலேயே அவர் பேரின்பம் கொண்டார். தாம் பெற்ற இன்பத்தை இவ்வையகத்தோருக் கெல்லாம் எடுத்துச் சொல்ல ஆரம்பித்தார்.

''தமருகந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே
தமருகந்த தெப்பேர் மற்றப் பேர்—தமருகந்து
எவ்வண்ணம் சிந்தித்து இமையாதிருப்பரே
அவ்வண்ணம் ஆழியானும்''

பக்தர்கள் இச்சித்து அமைக்கும் உருவமே இறைவனின் திருவுருவமாகும். அவர்கள் விரும்பிச் சூட்டும் பெயரே அவன் பெயராகும். அன்பர்கள் இறைவனைப் பற்றி எப்படி சிந்திக்கிறர்களோ, அதன்படியே அவர் பக்தர்களுக்கு காட்சியளிப்பார். இறைவனுக்கு என்று தனித்தன்மையான ஒரு உருவமோ, பெயரோ கிடையாது. அவற்றில் அவனை அடக்குவதும் மனிதனல் இயலாத செயலாகும் என்கிறர் பொய்கையார்.

இறைவன் திருவேங்கட மலையிலும், திருப்பாற்கடலிலும் இருக்கிறன் என்று சொல்லுகிறர்களே, அந்த எம்பெருமான் தன்னை நினைப்போரது உள்ளத்திலெல்லாம் இருப்பதை பெரும்பாலானேர் உணர்வதில்லையே என்றும் வியக்கிறர் பொய்கை யாழ்வார்.

''உளன் கண்டாய் நன்னெஞ்சே உத்தமன் என்றும்
உளன் கண்டாய் உள்ளுவார் உள்ளத்து உளன்கண்டாய்
வெள்ளத்தின் உள்ளானும் வேங்கடத்து மேயானும்
உள்ளத்து உள்ளான் என்று ஓர்.''

வாயில் நாக்கும், உச்சரிக்க நமோ நாராயணு என்ற இனிய சொல்லும் இருக்க, சதா அதைக் கூறி நற்கதி பெறலாம். இருந்தபோதிலும் சிலர் தீயவழியில் சென்று ஏன் அல்லலுறவேண்டும், இது எத்தகைய திறமையாகும்? என்றவினு எழுப்பி, மாந்தரின் போக்கு புரியாமல் ஆச்சரியப்படுகிறர் பொய்கையாழ்வார்.

''நாவாயி லுண்டே நமோ நாரணு வென்று
ஓவா துரைக்கும் உரைஉண்டே—மூவாத
மாக்கதிக்கண் செல்லும் வகையுண்டே என்ஞெருவர்
தீக்கதிக்கண் செல்லும் திறம்''

திருமாலின் திருநாமத்தையும், திருக்கல்யாண குணங்களையும் சொல்ல வந்தவர் சில அறநெறிகளையும், அவற்றைத் தாம் கடைபிடிப்பதையும் பாங்குடன் சொல்லுகிருர்.

''நயவேன் பிறர் பொருளை ; நள்ளேன் கீழாரோடு ;
உயவேன் உயர்ந்தவரோ டல்லால் வியவேன்
திருமாலை யல்லது தெய்வமென்று ஏத்தேன்
வருமாறென் நம்மேல் வினை.''

பிறர் பொருளை விரும்பமாட்டேன். பக்தி இல்லாத கீழ்மக்களோடு சேர்ந்து உரையாடமாட்டேன். திருமாலையல்லாது மற்ற தெய்வங்களைத் தெய்வம், என்று எண்ணமாட்டேன். அதனுல் தன்மீது பிறவிதரும் வினை வராது என்று கூறுகிருர் பொய்கையார்.

இத்திருமாலின் தொண்டர் சைவ வைணவக்காழ்ப்பின்றி சமரச மனப்பான்மை கொண்டவராக விளங்கினுர். அரியும் அரனும் ஒன்றே என்பது அவர் கருத்து.

சடைமுடியோடு கூடிய புண்ணிய மூர்த்தியான சிவபெருமானும் உலகங்களை இருஅடிகளால் அளந்த நெடுமாலும், இருவேறு அங்கங்களில் திரிந்த போதிலும் ஒருவர் அங்கத்தில் மற்றவர் இருக்கிருர் என்ற பொய்கையாரின் கருத்து, பின்வரும் பாடலில் தெரிகிறது

''பொன் திகழு மேனிப் புரிசடையம் புண்ணியனும்
நின்றுலகம் தாய நெடுமாலும்—என்றும்
இரு வரங்கத்தால் திரிவரேனும் ஒருவன்
ஒருவன் அங்கத் துள் என்றுமுளன்.''

இருவருக்கும் நிறமும் தொழிலும்தான் வெவ்வேருனவை. தொழிலுக்குத் தகுந்த நிறத்தையே இருவரும் கொண்டுள்ளனர். அழித்தலுக்குச் செந்நிறமும், அளித்தலுக்கு கார்மேக நிறமும் உரித்தானவை.

பொய்கையார் தமிழ் இலக்கிய உலகிற்கு முதல் திருவந்தாதியை அருளியிருக்கிருர். நூறு பாக்களைக் கொண்ட இவை நேரிசை வெண்பாக்களாக அமைந்துள்ளது. படிக்கப் படிக்க தெவிட்டாத கருத்தாழம் கொண்ட செந்தமிழ் பக்திப் பாக்களாகும் இவை.

இவரது இலக்கியத்தின் இயல்பு திருவரங்கத்தமுதனுர் இயற்றிய இராமாநுச நூற்றந்தாதியில் பின்வருமாறு போற்றப்பட்டுள்ளது :

''வருத்தும் புறஇருள் மாற்ற, எம் பொய்கைப் பிரான் மறையின்
குருத்தின் பொருளையும் செந்தமிழ் தன்னையுங் கூட்டி ஒன்றத்
திரித்து அன்று எரித்த திருவிளக்கைத் தன் திருவுளத்தே
இருத்தும் பரமன் இராமாநுசன் எம் இறைவனே''

## பூதத்தாழ்வார்

சென்னையை அடுத்த மாமல்லபுரம் இன்று சுற்றுலாப் பயணிகளைக் கவரும் அழகிய நகரமாக விளங்குகிறது. பல்லவ காலச் சிற்பங்களையும் குகைக் கோவில் களையும், எழில் மிகுந்த இயற்கை வளங்களையும் கண்டு ரசிக்க பல்லாயிரக்கணக்கான மக்கள் மாமல்லபுரத்துக்குச் சென்ற வண்ணம் இருக்கிறார்கள். திருமகள் கேள்வன் இத்திருத்தலத்தில் சயனத் திருக்கோலத்தில் இருக்கிறார். அதன் விளைவாக தலசயனம் என்ற பெயராலும் இப்பகுதி அழைக்கப்படுகிறது.

இத்திருத்தலத்தில் ஐப்பசித் திங்களின் அவிட்ட நன்னாளன்று குருக்கத்தி மலரிலே கதாம்சராக பூதத்தாழ்வார் தோன்றினார். இளம் பருவத்தில் முறைப்படி கற்ற இவரது மனம் உலகப் பொருட்களை நாட மறுத்தது கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கினார். திருமாலின் திருவடிகள் காந்தம் போல இவரைக் கவர்ந்தது. திருமாலிடம் அளவில்லா அன்பைச் செலுத்தும் அடியவர் என்றும் இவரைக் குறிப்பிடுவார்கள். இவர் தமது பாசுரங்களில் அன்பையே அதிகமாக வலியுறுத்துகிறார்.

பூதத்தாழ்வாருக்கு திருமால் உருவங்களில் கண்ணன் உருவில் பிரியம் அதிகம். திருமாலைக்காண ஐம்புலனடக்கி, அன்பு கொண்ட மனத்தினராக, ஆய்ந்த மலர் கொண்டு அவன் நாமத்தைச் சொன்னால் அவன் கழல் காணலாம். அப்படிச் செய்ய தாங்கள் இருக்கிறார்கள் தங்கள் உள்ளங்கள் இருக்கின்றன, அர்ச்சிக்க தாமரைப் பூ உள்ளது, தொழுவதற்கு ஒத்த நேரமும் இருக்கிறது. அப்படிச் செய்தால் நரகம் புக மாட்டார்கள் என்பதை:

''அறிந்தைந்து முள்ளடக்கி ஆய்மலர்கொண்டு ஆர்வம்
செறிந்த மனத்தராய்ச் செவ்வே—அறிந்தவன்றன்
பேரோதி ஏத்தும் பெருந்தவத்தோர் காண்பரே
காரோத வண்ணன் கழல்''

—என்னும் பாசுரத்தில் கூறுகிறார். மனித மனம் ஆசையின் வசப்பட்டு நிலை யற்றவைகளின் மீது நாட்டம் கொண்டு ஆட்டம் போடுகின்றன. கடிவாளமற்ற குதிரை போல கட்டறுந்து ஓட எத்தனை வழிகள் உள்ளன! இந்த ஆசைகளை அடக்கவும் பூதத்தார் ஒரு பாசுரத்தில் எளிமையான வழியைச் சொல்லுகிறார். மாதவனின் பெயரைச் சொல்வதே வேதத்தின் சுருக்கம் என்கிறார். திருமாலைக் கைதொழுதால் ஆசைகள் பறந்துவிடும். அவன் திருவடிகளையன்றி மனம் எதையும் நாடாது என்பது இவரது அசைக்கமுடியாத கருத்து.

''தாமுளரே தம்முள்ள முள்ளுளதே, தாமரையின்
பூவுளதே ஒத்தும் பொழுதுண்டே—வாமன்
திருமருவு தாள்மருவு சென்னியரே செவ்வே
அருநரகம் சேர்வ தரிது''

மேலும், இரு உலகங்களையும் தமது திருவடிகளால் அளந்த திருமாலைத் தாம் கருவிலிருந்தபோதே கண்டு கை தொழுதேன் என்பதைப் பின்வரும் பாசுரத்தில் கூறுகிறார்:

''இன்று வறிகின்றே னல்லேன் இருநிலத்தைச்
சென்றங் களந்த திருவடியை—அன்று
கருக்கோட்டி யுள்கிடந்து கைதொழுதேன்
திருக்கோட்டி எந்தை திறம்.''

திருமாலின் அவதாரங்களைப் பாசுரங்களில் பாடிப் பரவசமெய்துகிறார் பூதத்தாழ்வார்.

''தோளிரண்டெட் டேழும் மூன்று முடியனைத்தும்
தாளிரண்டும் வீழச் சரந் துறந்தான்.''

—என்ற பாசுரத்தில் இராவணனைக் கொன்ற இராமாவதாரத்தைக் குறிக்கிறார்.

''அடியால் முன் கஞ்சனைச் செற்று''

—என்ற பாசுரத்தால் கம்சனைக் கொன்றதை எடுத்துரைக்கிறார்.

''வலிமிக்க வாளெயிற்று வாளவுணர் மாள''

—என்ற பாசுரத்தில் கடல் கடைந்த வரலாற்றைப் பாங்குடன் உரைக்கிறார்.

''தொடரெடுத்த மால் யானை''

—என்னும் பாசுரத்தில் கஜேந்திரன் வரலாறு கூறப்பட்டுள்ளது.

அன்பினால்தான் மாலோன் அருள் பெற முடியும் என்பது பூதத்தாழ்வாரின் அசைக்க முடியாத கருத்து.

நூறு வெண்பாக்களாலான இரண்டாம் திருவந்தாதியை தமிழ் இலக்கியத்திற்கு இவர் அளித்துள்ளார். தான் தமிழன் என்பதில் இவர் பெருமை கொள்கிறார் இவரது வெண்பாக்கள் எளிமையான முறையில் ஆழ்ந்த கருத்தைச் சொல்லி, பக்தியைப் பரப்பும் இனிய தமிழ் பாக்களாகும். செந்தமிழில் எம்பெருமானுக்கு பாமாலை சூட்டும் பெரும் பேற்றைப் பெற்ற தான் பாக்கியவான் என்கிறார்:

''யானே தவம் செய்தேன் ; ஏழ்பிறப்பும் எப்பொழுதும்
யானே தவம் உடையேன் ; எம்பெருமானை—யானே
இருந்தமிழ் நன்மாலை இணைபடிக்கே சொன்னேன்
பெருந்தமிழன் நல்லேன் பெரிது.''

## பேயாழ்வார்

சென்னையைச் சேர்ந்த மாமயிலை (மயிலாப்பூர்) யில் உள்ள ஆதிகேசவப் பெருமாள் கோயில் திருக்கிணற்றில் உண்டான செவ்வல்லி மலரில் ஐப்பசித் திங்கள் சதய நட்சத்திரத்தினத்தன்று நாந்தகம் என்னும் வாளின் அம்சமாக பேயாழ்வார் அவதரித்தார்.

'எந்நாளும் எம்பெருமான் திருமாலின் திருவடிகளையே தொழுது தொடர்ந்திரு நெஞ்சே' என்னும் பேயாழ்வாருக்கு கண்கள் அவனையே காணவேண்டும், நா அவன் திருநாமங்களையே சொல்ல வேண்டும், செவிகள் அவனது திருக்கல்யாண

குணங்களையே கேட்க வேண்டும் என்ற பேராசை அதிகம். திருமாலிடம் தீராத காதல் கொண்டவர் இவர்.

''அடிவண்ணம் தாமரை யன்று உலகம் தாயேன்
படிவண்ணம் பாற்கடல் நீர் வண்ணம்-முடிவண்ணம்
ஓராழி வெய்யோன் ஒளியும் அஃதன்றே
ஆராழி கொண்டார் அழகு''

''கண்ணும் கமலம், கமலமே கைத்தலமும்,
மண்ணளந்த பாதமும் மற்றவையே-என்னில்
கருமா முகில் வண்ணன் கார்கடல் நீர் வண்ணன்
திருமா மணிவண்ணன் தேசு ''

—என்று திருமாலின் அழகைப் பரவசத்துடன் ரசித்து மகிழ்கிறார் பேயாழ்வார்.

திருக்கோவலூரில் உலகளந்த பெருமானைத் தாம் கண்ணாரக் கண்ட காட்சியையும் தாம் பெற்ற இன்பத்தையும் கீழ்க்கண்ட பாசுரத்தில் பாடி மகிழ்கிறார் பேயாழ்வார் :

''திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்
அருக்கன் அணிநிறமும் கண்டேன்-செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன் புரிசங்கம் கைக்கண்டேன்
என் ஆழி வண்ணன்பால் இன்று''

தூய்மையான சிந்தனையுள்ளவர்கள் இறைவனைத் தேடிப் போக வேண்டிய அவசியமில்லை. அவனே வந்து அவர்கள் நெஞ்சத்தினுள் குடிபுகுவான் என்கிறார் ஆழ்வார். திருமாலின் அழகை அணு அணுவாக ரசித்து மகிழ்கிறார் பேயாழ்வார்.

''அடிவண்ணம் தாமரை யன்றுஉலகம் தாயோன்
படிவண்ணம் பாற்கடல்நீர் வண்ணம் முடிவண்ணம்
ஓராழி வெய்யோன் ஒளியும் அஃதன்றே
ஆராழி கொண்டார் அழகு''

''கண்ணும் கமலம், கமலமே கைத்தலமும்,
மண்ணளந்த பாதமும் மற்றவையே— என்னில்
கருமா முகில்வண்ணன் கார்கடல் நீர்வண்ணன்
திருமா மணிவண்ணன் தேசு.''

—என்ற பாசுரங்கள் பேயாழ்வாரின் ரசனைக்கு ஓர் எடுத்துக்காட்டு.

பேயாழ்வாரும் சைவ—வைணவ சமய வேறுபாடற்ற சமரச மனப்பான்மை கொண்டவர் என்பதைப் பின்வரும் பாசுரம் ஐயமற உணர்த்துகிறது.

''தாழ்சடையும் நீள்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்
சூழ்அரவும் பொன்நாணும் தோன்றுமால் சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து.''

பேயாழ்வாரின் நூறு பாசுரங்கள் மூன்ருந் திருவந்தாதி என்று கூறப்படு கின்றன. இந்நூலும் நேரிசை வெண்பாக்கள். ஆழ்ந்த கருத்தும், நிறைந்த பொருட்செறிவும், அனுபவ சித்தாந்தமும் இம் மூன்ருந் திருவந்தாதியில் காணப்படு கின்றன. எளிமையான பாக்களினுல் திறமையுடன் கருத்துக்களை வெளியிட்டிருக் கிருர். இவரது பாடல்களில் இயற்கை வர்ணனைகள் அதிகமாக இழையோடுவதை உணரலாம். பக்தியைப் பரப்புவதும், சமரச சமய நோக்கையும் இவரது பாக்களில் தெளிவாகக் காணலாம்.

ஸ்ரீ வேதாந்த தேசிகர் இவரை :

''மாமயிலைப் பதியதனில் துலாமா தத்தில்
வருஞ்சதயத் தவதரித்துக் கோவலூரில்
தூமுனி வரிருவருடன் துலங்க நின்று
துன்னியபே ரிருள் நீங்கச் சோதி தோன்றச்
சேமமுடன் மாலைக் காணப் புக்குத்
திருக்கண்டே னெனவுரைத்த தேவே, உன்றன்
பாமருவு தமிழ்மாலை நூறு பாட்டும்
பழவடியே னுக்கருள்செய் பரம நீயே.''

—என்று தமது பிரபந்த சாரத்தில் பாடிப் போற்றி மகிழ்கிருர்.

## திருமழிசை ஆழ்வார்

திருமழிசை வளம் கொழிக்கும் ஒரு சிற்றூர். தொண்டை நாட்டின் திருப்பதி களுள் சிறந்ததாகக் கருதப்படுவது திருமழிசை. சென்னையையடுத்த பூவிருந்தவல்லி (பூந்தமல்லி) யிலிருந்து ஆறு மைல் தூரத்திலிருக்கிறது திருமழிசை.

திருமழிசை ஆழ்வாரின் வரலாறு சுவைமிக்கது. இப்பதியில் தங்கிய பார்க்கவ முனிவர் ஒரு யாகம் இயற்றினுர். அதன் முடிவில் அவரது மனைவி கருவுற்று பன்னிரண்டு மாதங்களுக்குப் பின் ஒரு பிண்டத்தைப் பெற்றெடுத்தாள். பிறந்த குழந்தை கைகால் முதலிய உறுப்புகளின்றி இருந்தது. உள்ளம் சோர்ந்த முனிவரும் அவரது மனைவியும் உறுப்புக்களற்ற அக் குழந்தையை ஒரு பிரப்பம் புதரினருகே கிடத்திவிட்டுச் சென்றுவிட்டனர்.

திருமாலின் அருள் மிகுந்த அக்குழந்தை அங்கங்களைப் பெற்று, ஒரு ஆண்மக வாகி, அழத் தொடங்கியது. திருவாளன் என்ற பிரம்புத் தொழிலாளியின் கண்ணில் அக்குழந்தை தென்பட்டது. பிள்ளைச்செல்வம் இல்லாத அத்தொழிலாளி மகிழ்ச்சி மேலிட்டு, இறைவன் தந்த செல்வமாக நினைத்து அக் குழந்தையை எடுத்துச் சென்று தன் மனைவி பங்கயச் செல்வியிடம் கொடுத்தான். அவளும் சிரத்தையுடன் அக் குழந்தையை வளர்க்க ஆரம்பித்தாள்.

தைத் திங்களில் மக நட்சத்திரத்தில் திருமழிசையில் அவதரித்த இவருக்கு திருமழிசைபிரான் என்று நாமகரணம் செய்தனர். மகாவிஷ்ணுவின் சக்கர அம்சம் இவர்.

திருமழிசைப்பிரான் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து தமது ஏழாவது வயதிலேயே புலன்களை அடக்கி யோகம் செய்யும் ஆற்றலைப் பெற்ருர். பல சமயங்கள் கூறும் மூல முதற்பொருளை அறிய அவர் ஆவல் கொண்டார். ஒவ்வொரு சமயத்திலும் புகுந்து ஆராய்ந்து சமணம், சாக்கியம் போன்ற சமயங்களின் நூல்களைக் கற்ருர் சிவவாக்கியர் என்னும் திருநாமத்துடன் சைவராக சைவ நூல்களைக் கற்ருர். பல சிவஸ்தலங்களுக்குச் சென்று பெருமானைத் தரிசித்துப் பாடினுர்.

திருமிழிசை ஆழ்வாரின் மனம் திருப்தி காணவில்லை. நிலையற்று அலைமோதியது. அமைதியற்ற மனோநிலையில் அவர் திருமயிலைக்கு வந்தார். அங்கு பேயாழ்வார் இருந்தார். திருமழிசையாரின் மனோநிலையை அவர் உணர்ந்து, அவரைத் திருத்த எண்ணம் கொண்டார். ஒரு நந்தவனத்தில் செடிகளை தலைகீழாக நட்டு, அறுந்து முடியிட்ட கயிற்றினால் கட்டிய ஓட்டைப் பாண்டத்தில் அச்செடிகளுக்கு திருமழிசையார் காணும் வகையில் தண்ணீர் விட ஆரம்பித்தார். பேயாழ்வாரின் செயலைக் கண்ட திருமழிசையார் நகைத்தார். ஏதுமறியாதவர்போல, பேயாழ்வார் திருமழிசையாரின் நகைப்பிற்குக் காரணம் கேட்டார். தலைகீழாகச் செடிகளை நட்டு, ஓட்டைப் பாத்திரத்தில் தண்ணீர் ஊற்றும் செயலே நகைப்பின் காரணம் என்று திருமழிசையார் பதிலளித்தார். தமது செய்கையின் உட்பொருளை உணர முடியாத திருமழிசையாரின் போக்கு பேயாழ்வாருக்கு வியப்பளித்தது. திருமழிசை ஆழ்வார் அவரது செயலின் உட்பொருளை உணர்த்த வேண்டினுர்.

அறுந்து முடியிட்ட கயிறு அவர் மதம் விட்டு மதம் மாறுதலைக் குறிப்பது என்றும், ஓட்டைக் குடத்துள் இட்ட நீர் தங்காமல் விழுவது எம்மதக் கொள்கையும் அவர் மனத்தில் நிலைக்காது நீங்குவதைக் குறிப்பதென்றும், செடியைத் தலைகீழாக நட்டது எது முதற்பொருள் என்று அறியாத நிலையை உணர்த்துவது என்று பேயாழ்வார் விளக்கினுர்.

திருமழிசை ஆழ்வாரின் மன இருள் நீங்கியது. பேயாழ்வாரை வணங்கி தமது ஞான குருவாக ஏற்ருர். திருமழிசையார் விரும்பியபடி பேயாழ்வார் அவருக்குத் திருமந்திரத்தை உபதேசித்தார்.

திருவல்லிக்கேணி பகுதியில் அம்மந்திரத்தை உச்சரித்த வண்ணம் யோக நித்திரையில் ஆழ்ந்தார் திருமழிசையாழ்வார். திருமாலும் திருமகளும் தங்கள் அருளால் அவருக்கு மதி நலம் அருளினர்,

''சாக்கியம் கற்ருேம் சமணம் கற்ருேம்-அச்சங்கரனுர்
ஆக்கிய ஆகமநூல் ஆராய்ந்தோம்-பாக்கியத்தால்
செங்கட் கரியானைச் சேர்ந்தியாம் தீதிலோம்
எங்கட் கரிய தொன்றில்''

—என்று அவன் பேரருளை வியந்தார். இவரது திருமால் பக்தியை மெச்சிய உமைபாகா் இவருக்கு பக்திசாரர் என்ற பட்டத்தை வழங்கியதாகவும் கூறப்படுகிறது.

## முதலாழ்வார்களும் திருமழிசையாரும்

முதலாழ்வார்கள் மூவருக்கும் திருக்கோவலூரில் ஒரு ஜோதி தெரிந்தது. முதலாழ்வார்கள் மூவரும் தங்கள் திருக்கோவலூரில் கண்ட பேரொளி எங்கிருந்து வந்ததென அறிய அதைத் தொடர்ந்தனர். அவ்வொளி திருமழிசையாழ்வார் யோகநிலையிலிருந்த மலைக்குகையினுள் சென்று மறைந்தது. மூவரும் அங்கு வந்து யோகத்திலிருந்த திருமழிசையாரைக் கண்டனர். திருமழிசையார் யோகம் கலைந்து மூவரையும் கண்டு வணங்கினர். மூவரும் திருமழிசையாருடன் யோகத்திலமர்ந்து திருமகள் கேள்வனை மனத்திருத்தினர்.

பின்னர் நால்வரும் மயிலையடைந்து பேயாழ்வார் அவதரித்த கிணற்றருகில் யோக நிஷ்டையில் அமர்ந்தனர். யோகம் கலைந்த முதல் ஆழ்வார்கள் மூவரும் திரு மழிசையாழ்வாரிடம் பிரியா விடை பெற்றுப் பிரிந்து சென்றனர். திருமழிசையார் அவர்கள் பிரிவினால் வருந்தித் திருமழிசை சென்றடைந்தனர். திருமகள் நாதனருளால் திருமண் கண்டு, அதைக்கொண்டு பன்னிரு நாமங்களை உடலில் அணிந்து, இறைவன் திருவருளைப் போற்றினர்.

பின்னர் திருமழிசையார் பொய்கையாழ்வார் அவதரித்த திருவெஃகாவிற்குச் சென்று சிறிது காலம் அங்கு தங்கினர். கணிகண்ணன் அங்கு வந்து அவருடைய சீடரானர். குருவின் அருள் பெற்ற அவர், குருவுக்குத் தொண்டுகள் பல புரிந்து ஞானம் பெற்று வந்தார்.

திருமழிசையாரின் பெருமையை உணர்ந்த மூதாட்டி ஒருத்தி, தினமும் அப் பெருமானின் இல்லத்து வாசலை யாரும் அறியாவண்ணம் சாணத்தால் மெழுகி கோல மிட்டு வந்தாள். ஒருநாள் இதை கவனித்த திருமழிசையார் மனம் உவந்து, அம்மாதை வேண்டும் வரம் ஒன்று கேட்கச் சொன்னர். அதுகேட்ட மூதாட்டி தான் ஆழ்வார்க்கு இன்னும் சிறப்பான முறையில் தொண்டு புரிய இளமைப் பருவம் பெற வரம் வேண்டினள். ஆழ்வாரும் அங்ஙனமே ஆகட்டுமென்ருர். அம்முதியவள் எழில்மிக்க வனிதையாக மாறி அவரை வணங்கி விடைபெற்றுச் சென்ருள்.

அச்சமயம் காஞ்சித் தலைநகரை ஆண்டு வந்த பல்லவ மன்னன் இளமை பெற்ற அப்பெண்ணின் அழகில் மனதைப் பறிகொடுத்து அவளை மணக்க தன் ஆவலைத் தெரிவித்தான். அவள் இசைய, அவளை மணந்தான். காலப் போக்கினில் அரசன் மூப்பெய்தினன். ஆயினும் இளமை பெற்ற முதியவள் மூப்படையா இளமை கண்டு வியந்தான். அவள் இளமை பெற்ற வகையினையறிந்து, அரசன் தானும் கணி கண்ணன் மூலம் திருமழிசையார் அருளால் இளமை பெற முயன்ருன். கணிகண்ணன் திருமழிசையார் அதற்கு இசையமாட்டார் என்று சொல்ல, அவரையே தன்னைப் பாடு மாறு பணிந்தான் அரசன். அவர் 'நாக்கொண்டு வைகுந்த வாசனைப் பாடுவதல்லது, மானிடம் பாடேன்' என, ஆணவமிக்க அரசன் சினம் கொண்டான் 'இன்றே நாடு விட்டு செல்க' என ஆணை பிறப்பித்தான். சற்றும் சளைக்காத கணிக்கண்ணன் அப்படியே செய்வதாகச் சொல்லி அவ்விடம் விட்டகன்ருன்.

நடந்ததை குருவிடம் சொல்ல, அவரும் அவனுடன் புறப்படுவதாகச் சொல்லி அரவணைச் செல்வனுகிய திருமாலை கீழ்கண்ட பாசுரத்தால் பாடி, உடன்வர வேண்டி ஞர்.

E

''கணிகண்ணன் போகின்ருன் காமருபூங் கச்சி
மணிவண்ணு நீ இருக்க வேண்டா—துணிவுடைய
செந்நாப் புலவன்யான் போகின்றேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்''

## பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சை பசுங்கொண்டல்

இவ்வேண்டுகோள் பரந்தாமன் செவி புகுந்து, தமது பக்தன் விரும்பிய வண்ணமே, அவர்தம் பாம்பணையைச் சுருட்டிக் கொண்டு ஆழ்வார் பின்கிளம்பி, 'சொன்ன வண்ணம் செய்த எம்பெருமான்' எனப் பெயர் பெற்ருர். இறைவனே கச்சியம்பதி விட்டேகிய பின்னர் தேவரும் மற்றையோரும் கிளம்பினர் என்று சொல்வது மிகையேயன்ரே ! இதனல் கச்சியம்பதி பொலிவிழந்தது

திருமழிசையாரும் கணிக்கண்ணனும் மற்றை யாவரும் அன்றிரவைப் பாலாற்றங்கரையில் ஓரிடத்தில் தங்கிக் கழித்தனர். அவ்விடம் 'ஓரிரவிருக்கை' என பெயர் பெற்றது. இன்று அது மருவி 'ஓரிக்கை என வழங்கப்படுகிறது.

பல்லவமன்னன் தன் செயலின் விளைவையறிந்தான். தன் மடமையை உணர்ந்தான். திருமழிசையாரின் மாண்பினை அறிந்தான். பரிவாரம் புடைசூழ ஓரிரவிருக்கை சென்ருன். திருமழிசையார் அடியில் வேரறுந்த மரம் போல் விழுந்து, தன்னை மன்னித்து அருளி, கச்சிக்குத் திரும்புமாறு வேண்டினன்.

'நீர் கிழிய எய்த வடுப்போல மாறுமே சீரொழுகு சான்ருேர் சினம்' ஆதலால் திருமழிசையாரும் மன்னன் பிழையைப் பொறுத்து, கணிகண்ணருடன் திருவெஃகா திரும்பலானுர். இறைவனையும் மறுபடியும் தன்னுடன் வர வேண்டினுர்.

''கணிகண்ணன் போக்கொழிந்தான் காமருபூங்கச்சி
மணிவண்ணு நீ கிடக்க வேண்டும் !—துணிவுடைய
செந்நாப்புலவனும் செலவொழிந்தேன் ; நீயும்உன்றன்
பைந்நாகப் பாய்படுத்துக் கொள்''

பெருமானும் பக்தர் வேண்டுகோளுக்குச் செவிசாய்த்து, காஞ்சிக்குத் திரும்பி வந்து, பைந்நாகப் பாயை விரித்துப் பள்ளி கொண்டார். 'சொன்ன வண்ணம் செய்த பெருமான்' எனத் திருநாமம் சூட்டப் பெற்ருர். காஞ்சி நகரமும் இழந்த பொலிவை திரும்பப் பெற்றது.

திருமழிசையார் திருக்குடந்தை என்னும் கும்பகோணம் சென்று, ஆராவமுதப் பெருமாளின் சயனத் திருக்கோலத்தைக் கண்டு களித்தார்.

''நடந்த கால்கள் நொந்தவோ நடுங்கஞால மேனமாய்
கிடந்தமெய் குலுங்கவோ விலங்குமால் வரைச்சுரம்
கடந்தகால் பரந்தகா விரிக்கரைக் குடந்தையுள்
கிடந்தவா றெழுந்திருந்து பேசு''

என ஆழ்வார் விண்ணப்பிக்க, ஆராவமுதனும் எழுந்து பேச முயல ஆழ்வார், 'வாழிகேசவனே' என்று பகவானை மங்களாசாசனம் செய்தார் என்று கூறுவர்.

திருக்குடந்தையையே தமது இருப்பிடமாகக் கொண்டு திருமழிசையாழ்வார் வைணவப் பிரசாரம் செய்ய ஆரம்பித்தார்.

திருவெஃகாவிலிருந்து திருக்குடந்தை செல்லும் வழியில் பெரும்புலியூரில் இருமாந்திருந்த மறையவர்களுக்கு திருமழிசையார் அறிவுரை செய்தார். அவர்கள் அகந்தையால், திருமழிசையார் காதில் வேதம் விழக்கூடாதென வேதம் ஓதுதலை நிறுத்திவிட்டனர். ஆனால் அவர்களுக்குப் பின், விட்ட இடந் தெரியாத தவிப்பு ஏற்பட்டது. திருமழிசையார் விட்ட இடத்தை குறிப்பால் உணர்த்த, அவர்களும் அகந்தை அகன்று அவரைப்போற்றினர்.

பெரும்புலியூரில் திருக்கோயில் கொண்டுள்ள எம்பெருமான் பக்திசாரர் தெருத் தெருவாகப் பிக்ஷை ஏற்றுச் செல்லும் போதெல்லாம், அவர் செல்லும் திசை நோக்கித் தம் திருமுகத்தைத் திருப்பினாராம். இதைக் கண்ட அர்ச்சகரும் வேள்வியை நடத்தி வந்த பெரும்புலியூர் அடிகளும் வியந்தனர். அடிகளார், திருமழிசையார் இறைவன் திருவருள் கைவரப் பெற்றவர் என்பதையுணர்ந்து, அவரிடம் சென்று பணிந்து, அவரை யாகசாலைக்கு எழுந்தருள வேண்டினர். அவர் யாகசாலைக்கு எழுந்தருள, அவரை உபசரித்து அக்ரபூசைக்கு அவரை உரியவராக்கினர். சடங்கினை செய்தோருக்கு இது பிடிக்கவில்லை. அவர்கள் பக்திசாரர் என்னும் திருமழிசையாரை வாய்க்கு வந்தபடி தூற்றினர். இவற்றைக் கேட்ட திருமழிசையார் அவர்களின் சிறுமதிக்கு வருந்தி, அவர்கட்கு உண்மையினை தெரிவிக்க வேண்டி, இறைவனை கீழ்கண்ட வாறு வேண்டினர்.

''அக்கரங்கள் அக்கரங்கள் என்றுமாவ தென்கொலோ
இக்குறும்பை நீக்கி என்னை ஈசன் ஆக்கவில்லையேல்
சக்கரங்கள் கொள்கையானே சடங்கர்வாய் அடங்கிட
உட்கிடந்த வண்ணமே புறம்பொதித்து காட்டிடே''

திருப்பாற்கடல் பாம்பணையான் பக்திசாரர் விரும்பியபடி, அவர் திருமேனியில் திருபாற்கடலிலுள்ள தன்காட்சியைத் தோற்றுவித்தார். பக்திசாரரின் பெருமையை சடங்கரும் உணர்ந்தனர். மன்னிப்பு வேண்டினர். அகந்தையை அகற்றினர். அறிவு பெற்றனர்.

திருக்குடந்தையில் ஆராவமுதனைச் சேவித்து மனமகிழ்ந்த திருமழிசையார், அதுவரை தாம்பாடிய பாசுரங்களை ஏட்டில் எழுதி அவ்வேடுகளை காவிரியில் மிதக்க விட்டார். அவற்றுள் திருச்சந்த விருத்தமும், நான்முகன் திருவந்தாதியும் நீரோட்டத்தை எதிர்த்து ஏறிப் பக்திசாரர் அருகில் வந்தன. அவர் அவற்றை உலக மக்கள் உய்ய உபகரித்தார்.

பலசமயம் புகுந்து பின் வைணத்தில் புகுந்தமையால், திருமால் பக்தியில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டார், தி மாலின் பரத்துவத்தைக் கீழ்கண்டவாறு விவரிக்கிறார்.

''இனி அறிந்தேன் ஈசற்கும் நான்முகற்கும் தெய்வம்
இனி அறிந்தேன் எம்பெருமான் ! உன்னை இனி அறிந்தேன்

காரணன் நீ; கற்றவை நீ; கற்பவை நீ; நற்கிரிசை
நாரணன் நீ; நன்கறிந்தேன் நான்.''

மற்றும்,

''நான்முகனை நாராயணன் படைத்தான்; நான்முகனும்
தான் முகமாய்ச் சங்கரனைத் தான்படைத்தான்; யான்முகமாய்
அந்தாதி மேலிட்டு அறிவித்தேன் ஆழ்பொருளை
சிந்தாமல் கொள்மின் நீர் தேர்ந்து.''

எனப் பிறருக்கும் அறிவுறுத்துகிறார். அது மட்டுமா? திருமால் எல்லாமாய் நிற்கிறான் என்பதை விளக்கமாக எடுத்து காட்டுகிறார்.

''உலகுதன்னை நீபடைத்தி யுள்ளொடுக்கி வைத்தி, மீண்
டுலகுதன்னுள் ளேபிறத்தி யோரிடத்தை யல்லையேல்
உலகு நின்னொ டொன்றி நிற்க வேறுநிற்றி யாதலால்
உலகில் நின்னை யுள்ளசூழல் யாவருள்ள வல்லரே?

என்றும்,

''தன்னுளே திரைத்தெழும் தரங்கவெண் தடங்கடல்
தன்னுளே திரைத்தெழுந் தடங்குகின்ற தன்மைபோல்
நின்னுளே பிறத்திறந்து நிற்பவும் திரிபவும்
நின்னுளே யடங்குகின்ற நீர்மை நின்கண் நின்றதே,''

என்றும், திருமால்தான் எல்லாம் என்பதை எடுத்துக் காட்டுகிறார்.

''பாம்பணை மேல் பள்ளி கொண்டிருந்த பரமன் தன் படுக்கையை விட்டு என் இதயத்தை இருப்பிடமாகத் தேடி வந்திருக்கிறான். இது அவன் திருவுள்ளம். என் இதயமோ சிறியது அதில் ஒருவர்க்கு மேல் இடமில்லை. ஆகவே பிறை சூடிய சிவபெருமானுக்கும் பிரம்மனுக்கும் இடம் கொடுக்க முடியாத நிலையிலிருக்கிறேன், அவர்கட்கு ஆட்செய்யவும் முடியாது என்று எவ்வளவு அழகாக ஒரு மூர்த்தியைத் தியானிக்கும் தத்துவத்தை எடுத்துக் காட்டுகிறார் திருமழிசையார். பிறமதத் துவேஷமில்லை என்றும் இதனால் வெளிப்படுத்துகிறார். நான்முகன் திருவந்தாதியில்:

''இடமாவ தென்னெஞ்சம் இன்றெல்லாம், பண்டு
படநாகணை நெடிய மாற்கு-திடமாக
வையேன் மதிசூடி தன்னோடு அயனை நான்
வையே னாட்செய்யேன் வலம்.''

எல்லாம் திருமால் மயம் என்னும் கொள்கையினராயினும், இவரிடம் சமயக் காழ்ப்பு இல்லை.

பிற சமயம் புகுந்திருந்ததை 'அன்று நான் பிறந்திலேன்' என்கிறார். வைணவ சமயம் புகுந்த பின் திருமாலை மறக்கவில்லை என்கிறார். ஊரகத்து நின்ற திருக்கோலத் திருப்பவரும், பாடகத்து இருந்த திருக்கோலத்திருப்பவரும், வெஃகாவில் பள்ளி கொண்ட திருக்கோலத்திருப்பவரும் தன் நெஞ்சுளே இருக்கிறார் என்கிறார்.

மக்களுக்கு, 'திருமாலை, வாமனனாக வந்த எம்பெருமானை, வணங்கினால் ஞானமும், செல்வமும் பெருகித் தீவினைகள் அறும்' என்கிறார்.

''அறிந்தறிந்து பரம னடியிணை வணங்கினுல்
தெறிந்தெழுந்த ஞானமோடு செல்வமும் சிறந்திடும்
மறித்தெழுந்த தெண்டிரையுள் மன்னுமாலை வாழ்த்தினுல்
பறிந்தெழுந்து தீவினைகள் பற்றறுதல் பான்மையே''

ஆனுல் அவனை அடைய, அவனைக் காண, ஐம்புலனடக்கமும், ஞானச் சுடர் விளக்கும், எல்லாவற்றிற்கும் மேலாக நெஞ்சுருகி உளம்கனிந்த அன்பும் வேண்டு மென்கிறுர்.

''புன்புல வழியடைத் தரக்கிலச்சனை செய்து
நன்புல வழிதிறந்து ஞானநற் சுடர்கொளீஇ
என்பிலெள்கி நெஞ்சுருகி யுள்கனிந் தெழுந்ததோர்
அன்பிலன்றி ஆழியானை யாவர்காண வல்லரே.

உலக வாழ்க்கை அநித்தியமென்பதை உணர்ந்தும், மக்கள் அவன் பாதம் வணங்கி ஏன் தேவராக வாழாது உழல்கின்றனர் என்று வருந்துகிறுர்; பச்சாத்தாபப் படுகிறுர். அவர்களை நீசர் என்கிறுர்.

''இன்று சாதல் நின்றுசாத லன்றியாரும் வையகத்து
ஒன்றி நின்று வாழ்தலின்மை கண்டுநீச ரென்கொலோ
அன்றுபா ரளந்தபாத போதையுன்னி வானின்மேல்
சென்று சென்று தேவரா யிருக்கிலாத வண்ணமே?''

அவனை நினைத்தால், அவன் நம் பிறப்பறுத்து நம்மை ஆட்கொள்வான் என்கிறுர்.

''அத்தனுகி யன்னையாகி யாளும்மெம்பி ரானுமாய்,
ஒத்தொவ்வாத பல்பிறப் பொழித்து நம்மையாட் கொள்வான்
முத்தனுர் முகுந்தனுர் புகுந்துநம்முள் மேவினுர்
எத்தனு லிடர்க்கடல் கிடத்தியேழை நெஞ்சமே''

பகவானை நினைப்பதையே நம் தொழிலாகக் கொள்ள வேண்டுமென்பதைச் சொந்த அனுபவத்தைக்கூறி அறிவுறுத்துகிறுர்:

'தெரிந்தெழுதி வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும்
பூசித்தும் போக்கினேன் போது'

மற்றும் நம்மை விட்டுவிட்டு இறைவனுல் பரிபூரணனுய் இருக்க முடியாதென்ற தம் கொள்கையை வெளியிடுகிறுர். நாம் இல்லாமல் அவன் இல்லை. அவன் இல்லாமல் நாம் இல்லை என்கிறுர்.

''நான் உன்னை அன்றி இலேன் கண்டாய் நாரணனே
நீ என்னை அன்றி இல்லை.''

இலக்கிய உலகுக்கு அவர் நூற்றிருபது பாசுரங்களுடைய திருச்சந்த விருத்தமும், தொண்ணூறு பாசுரங்கள் கொண்ட நான்முகன் திருவந்தாதியும் உதவினுர்.

இவ்விரு இலக்கியங்களும் வேதப் பொருள் நிறைந்து, திருமாலின் பரத்துவத்தை விளக்குவனவாக அமைந்துள்ளன. நான்முகன் திருவந்தாதியின் முதல் பாசுரமே நாராயணனின் பரத்துவத்தைச் சொல்லுவதாக அமைந்துள்ளது. நடையில் மிடுக்கும் ஓசையில் இனிமையும் கொண்டவை இவர் பாசுரங்கள். தன் கருத்தை வெளியிடுவதில் இவருக்கு நிகர் இவர் தான். இதோ ஒரு எடுத்துக் காட்டு

இனி அறிந்தேன் ஈசற்கும் நான்முகற்கும் தெய்வம்
இனியறிந்தேன் எம்பெருமான்! உன்னை-இனியறிந்தேன்
காரணன்நீ கற்றவைநீ கற்பவைநீ நற்கிரிசை
நாரணன்நீ! நன்கறிந்தேன் நான்''

என்பது அவர் திடசித்தம்.

'அவனை நினைப்பதற்கும் அவனருள் தேவை' என்ற தத்துவத்தை கீழ்வரும் பாசுரத்தால் காட்டுகிறார் திருமழிசைப்பிரான். அதை அவர் தமது திருமாலிடம் தாம் வேண்டும் வரமாக அமைத்திருக்கிறார்.

''இரைந்துரைப்ப துண்டு. வாழி ஏமநீர் நிறத்தமா
வரந்தரும் திருக்குறிப்பில் வைத்ததாகில் மன்னுசீர்
பரந்தசிந்தை ஒன்றிநின்று நின்னபாத பங்கயம்
நிரந்தரம் நினைப்பதாக நீ நினைக்க வேண்டும் ''

பல சமயம் புகுந்து முடிவில் திருமால் பக்தியில் ஈடுபட்ட இவர், திருமாலே முழுமுதற் கடவுள் என்கிறார்.

திருமழிசையார், கடவுள் உண்டு என்பதையும் அவனே மூவராய் நிற்கின்றான் எனவும், அன்பினாலே தான் அவனை அடைய முடியுமென்பதையும் தெளிவாகப் பாசுரங்கள் மூலம் வலியுறுத்துகிறார் தனக்குத்தானே ஒப்பாக உள்ள ஈசன் தனக்கும் தன் போன்ற பேதையாருக்கும் காப்பாக இருக்கின்றான் என்கிறார்.

## நம்மாழ்வார்

உலகம் உய்யத் தவம் செய்த அவதாரங்களில் பெற்ற வெற்றிகளின் போதெல்லாம் பூரிப்படையாத எம்பெருமானின் தோள்கள், சடகோபரின் பாசுரங்களைக் கேட்டுப் பூரிப்படைந்தன என்பர் சான்றோர். அவருடைய பாசுரங்கள் இனிய தமிழில் வேதசாரமாக இருப்பதே அதற்குக் காரணமாகும். தமிழ் வேதமாகிய திருவாய் மொழி அருளிய அவரை 'வேதம் தமிழ் செய்த மாறன் சடகோபன்' என ஞானிகள் போற்றுவர். அவர் திருமாலடியார்களின் தலைவர்களாய் ஆழ்வார்களில் முதன்மையானவர். அவர் அருளிய ஞானச் செல்வத்தின் விளைவே இராமாநுஜ சித்தாந்தம். வைணவத் தொண்டர் குலத்திற்குத் தலைவரும் அவரே. ஆகவே அவர் வைணவத்தின் குலபதி என்றே அழைக்கப்படுகிறார். திருத்துழாய், மணத்தோடே முளைத்தல்போல, இவரும் இயற்கையிலேயே ஞானமும் பக்தியும் வைராக்யமும் அமையப் பெற்றவராக விளங்கினார். அவருடைய பதினாறு வயதுவரை அவை வெளிப்படவில்லை. அதுவரை அவர் யோக நித்திரையிலிருந்ததே அதற்குக் காரணமாகும்.

முத்தும் முத்தமிழும் கொழிக்கும் பாண்டிய நாட்டில், தாம்பிரவருணி ஆற்றின் கரையிலே திருக்குருகூர் என்ற ஊர் உண்டு. அங்கு வேளாண்மரபு காரியாருக்கும் உடைய நங்கையாருக்கும தவப்புதல்வராக வைகாசித் திங்கள் விசாக நன்னாளில், சேனை முதலியார் அம்சயாக குருகூர்ச் சடகோபர் தோன்றினர். குழந்தை பன்னிரெண்டு நாட்கள் கண் திறக்கவில்லை; அழவுமில்லை; பால் அருந்தவுமில்லை. ஆகவே பெற்றோர் கவலையில் மூழ்கினர் 'எல்லாம் அவன் செயல்' என்னும் நம்பிக்கையுடைய பெற்றோர், அவ்வூரில் எழுந்தருளியுள்ள பொலிந்து நின்ற பிரான் முன் குழந்தையைக் கிடத்தி வணங்கினர். பின், அதை அங்கிருந்த புளிய மரத்தடியிலேயே கிடத்தி வைத்து காத்து வந்தனர். யோக நித்திரையில் ஆழ்ந்திருந்த குழந்தை பதினாறு வயது வரை கண் விழிக்காமல் மௌனமாக இருந்தது யோக நித்திரையில் உபதேசம் பெற்ற இவருக்குப் பசி எப்படி உண்டாகும்?

வடதிசை யாத்திரை சென்றிருந்த வைணவ முதியவர் மதுரகவியார் தென்திசையில் தோன்றிய பேரொளியால் ஈர்க்கப்பட்டுக் குருகூர் வந்து சேர்ந்தார். புளியமரத்தடியில் ஒளிமயமாக அமர்ந்திருக்கும் உருவத்தைக் கண்டார். யோக நித்திரையில் ஆழ்ந்திருக்கும் அவ்வுருவத்தின் முன் சோதனையாக ஒரு சிறு கல்லை வீசி எறிந்தார். அது அவ்வுருவத்தின் முன் விழுந்தது. அதன் ஓசை கேட்டதும் பதினாறு வயது நிறைந்த அப்புனிதர் கண் விழித்தார். அவர் பார்வை மதுரகவியார் மீது விழுந்தது. உள்ளுணர்வு பெற்ற மதுரகவியார் இன்னுமொரு சோதனையை நடத்தினர். கீழ்கண்ட கேள்வி ஒன்றைக் கேட்டார். செத்தத்தின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்? என்பதே அக்கேள்வி. இதுவரை மௌனியாய் இருந்த அவர் வாய்திறந்து, 'அத்தைத் தின்று அங்கே கிடக்கும்' என்ற பதிலிறுத்தார், 'உடலில் ஆன்மா தங்கினல் எதனை அனுபவித்து எங்கே கிடக்கும்' என்ற கேள்விக்கு, 'அந்த உடலின் தொடர்பால் வரும் இன்பதுன்பங்களை அநுபவித்து அவ்விடத்திலேயே கிடக்கும்' என்ற பதில் கிடைத்தது.

முதியவரான மதுரகவியார் வியப்புற்று, அப்புனிதர் அடிகளில் விழுந்து வணங்கி தன்னைச் சீடராக ஏற்க வேண்டினர். ஆழ்வாரும் அதை அங்கீகரித்தார்.

சடமென்னும் வாயுவை சினந்து விரட்டியதால் சடகோபர் என்றும், உலக நடைக்கு மாருக இருந்தமையின் மாறன் என்னும் பெயர் பெற்றர். வகுளாபரணன், காரிமாறன், குருகைப்பிரான், பராங்குசன் என்ற பிறபெயர்களும் இவருக்கு உண்டு எம்பெருமானே ஒருசமயம் கம்பரை நோக்கி, 'நம்மாழ்வாரைப் பாடினையோ' எனக் கடாட்சித்ததால், நம்மாழ்வார் என்னும் சிறப்புப் பெயரும் இவர் பெற்றர். இதுகருதியே கம்பரும் 'சடகோபரந்தாதி' என்னும நூலை இயற்றினர் என்பார்கள்.

திருமால் கருடாழ்வார் மீது ஆரோகணித்து வந்து யாரும் அறியாவண்ணம் நம்மாழ்வாருக்கு மதிநலம் அருளிச் சென்றார்.

வைணவர்கள் நம்மாழ்வாரை அவயவியாகவும் மற்ற ஆழ்வார்களை அவயமாகவும் கூறுவர். இவர் வேதசாரமாக திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி திருவாய்மொழி முதலிய பிரபந்தங்களை இயற்றியருளினர். அப்பிரபந்தங்களைப் பட்டோலையில் எழுதும் பணி மதுரகவியாருக்குக் கொடுக்கப்பட்டது.

நம்மாழ்வாரின் திருவாய்மொழி அநுசந்தானம் இல்லாது மறைந்தது. ஆசார்யர்களின் பரம்பரையில் முதலானவரான நாதமுனிகள் மதுரகவியாரின் கண்ணிநுண் சிறுத்தாம்பு பாசுரங்களை ஓதி, யோகதிசையில், நம்மாழ்வாரின் அருளால் நாலாயிரத் திவ்வியப் பிரபந்த பாசுரங்களை எல்லாம் அறிந்து கொண்டு, அவைகட்கு இசையமைத்து அநுசந்தானம் செய்யும் முறையை ஏற்படுத்தினர். இதனல், நம்மாழ்வார், 'நாதனுக்கு நாலாயிரம் உரைத்தோன் வாழியே' எனப் போற்றப்படுகிருர்.

நம்மாழ்வார் தாமிரவருணி நதிக்கரையிலுள்ள நவ திருப்பதிகளையும், திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள நாங்குனேரி, திருக்குறுங்குடி, நாகர்கோவிலுக்கு அருகிலுள்ள திருவண்பரிசாரம் (திருப்பதிசாரம்) முதலியவற்றுடன், பன்னிரண்டு மலைநாட்டு திருப்பதிகளையும் மங்களாசாசனம் செய்திருக்கிருர். திருமாலிருஞ்சோலையையும் பாடி இருக்கிருர். தலங்களைப் பற்றிய வருணனைகள் இவர் நேரில் சென்று தரிசிக்க வேண்டும் என்பதையே தெளிவாக்குகின்றன. 'வருமழை தவழும் திருமாலிருஞ்சோலை' என்பதை எடுத்துக்காட்டாக சொல்லலாம். ஆயினும் இத்தலங்களிலுள்ள எம்பெருமான்கள் ஆழ்வார் இருக்கும் இடங்களிலேயே காட்சிதந்து, மங்களாசாசனம் செய்து கொண்டனர் என்பர் கற்றறிந்தோர். திருவரங்கம், திருக்குடந்தை, கும்பகோணம், திருவேங்கடம் முதலியவற்றையும் மங்களாசாசனம் செய்துள்ளார் நம்மாழ்வார்.

நம்மாழ்வார் முப்பத்தைந்து ஆண்டுகள் உலகநாதனைப் பாடி வழிபட்டு, உலகுய்யப் பிரபந்தங்களை இயற்றிப் பரமபதம் எய்தினர்.

பரமபதம் எய்துமுன்னரே தம் இறுதி நிலையை மதுரகவியாரிடம், 'வந்த காரியம் ஆகிவிட்டது என குறிப்பால் உணர்த்தினர். மதுரகவியார் தன்னையும் உடன் அழைத்துச்செல்ல வேண்டினர். 'மேதினியில் உள்ளோர்க்குச் செய்யமறைத் தமிழைச் செப்புவதார் நீயல்லால்' எனப் பணிந்தார். அவரும் இசைந்து, குருவுக்குப்பின் ஆழ்வார் கொள்கைகளைப் பரப்பி வந்தார். நம்மாழ்வாரின் விக்ரகத்தைத் திருநகரில் பிரதிஷ்டை செய்து விழாக்கள் நடத்தினர்.

நம்மாழ்வாருக்கு காணுவன எல்லாம் திருமால் மயமாகவே தோற்றமளித்தன.

பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற
காவிமலர் என்றும் காண்டொறும்—பாவியேன்
மெல்லாவி மெய்மிகவே பூரிக்கும் அவ்வவை
யெல்லாம் பிரான்உருவே யென்று.

திருமாலே மாயக்கவியாய் வந்து தன் நெஞ்சிலும் உயிரிலும் கலந்து தன்னைப் பாடுவித்துக் கொண்டார் என்பது அவர் திடசித்தம். இப்படி இறைவன் இவருடைய நெஞ்சையும் உயிரையும் கவர்ந்து பரிபூரணனுனன் என்கிருர்.

''வஞ்சக் கள்வன் மாமாயன்
மாயக் கவியாய் வந்து என்
நெஞ்சும் உயிரும் உள்கலந்து
நின்ருர் அறியா வண்ணம் என்
நெஞ்சும் உயிரும் அவை உண்டு
தானேஆகி நிறைந்த துவே.''

என்பது அவர் பாசுரம். இறைவனின் அடிச் சோதியையும் முடிச்சோதியையும் ஆழ்வார் அனுபவிக்கும் அழகே அழகு. இறைவனுக்கு முகச்சோதியே கிரீடமாக விளங்கும்போது, தனியாகக் கிரீடம் ஒன்று தேவையில்லை. அதுபோல திருவடியின் சோதியே தாமரை மலராக இருக்கப் பதுமபீடமெனத் தனியாய் ஒன்று தேவையில்லை என்பது ஆழ்வார் கருத்து. திருமாலின் திருவரையின் காந்தியே ஆடை அணிகலன்களாக விளங்குகின்றனவே என்கிறார். பாசுரத்தைச் சுவைப்போமா :

முடிச்சோதி யாய் உனது
முகச்சோதியே மலர்ந்தது வோ?
அடிச்சோதி நீ நின்ற
தாமரையாய் அலர்ந்தது வோ?
படிச்சோதி ஆடையுடன்
பல்கலனாய் நின்பைம் பொன்
கடிச்சோதி கலந்தது வோ
திருமாலே கட்டுரை யே!

நான்கு வேதங்களின் சாரமாக, ருக்வேதச் சத்தாக திருவாசிரியத்தையும், யஜுர் வேதச் சாரமாகத் திருவாசிரியத்தையும், சாமவேதச் சாரமாகந் திருவாய் மொழியையும், அதர்வணவேதச் சாரமாகத் திருவந்தாதியையும் இவர் பாடி இருக்கிறார். இதனால்தான், வேதம் தமிழ் செய்த மாறன் சடகோபன் எனப் போற்றப் படுகிறார். அமுதொழுகும் பாசுரங்கள் அவை.

திருவிருத்தம் நூறு பாசுரங்களையும், திருவாசிரியம் ஏழு பாசுரங்களையும், பெரிய திருவந்தாதி எண்பத்தேழு பாசுரங்களையும், திருவாய்மொழி 1102 பாசுரங்களையும் கொண்டவை. முதல் மூன்றும் மூவாயிரத்துள்ளும், திருவாய்மொழி நாலாயிரத்துள்ளும் சேர்க்கப் பட்டுள்ளன. ஏழு அகவற்பாக்கள் கொண்ட திருவாசிரியத்தில், விஷ்ணுவின் பரத்துவத்தை, அதாவது அவனுக்கு மேம்பட்ட தெய்வமில்லை என்பதை நிலை நாட்டுகிறார் ஆழ்வார்.

''சூழல் கோவலர் மடப்பாவையும் மண்மகளும் திருவும்
நிழல் போல்வனர் கண்டு நிற்குங்கொல் மீளுங்கொல் தண்ணந்துழாய்
அழல்போல் சுடும் சக்கரத் தண்ணல் விண்ணோர் தொழக் கடவும்
தழல்போல் சினத்த அப்புள்ளின் பின்போன தனிநெஞ்சமே.''

''ஆழ்வார், தம்மைத் திருமகளாகக் கருதிக் கொண்டு, தமக்குள்ள செய்திகளைக் கூறுகின்றனர். ஆதலின் திருமகளின் செய்திகளைக் கூறுவதாகவும் கொள்வர் ஒரு சாரார் தாய் போன்றும் தோழி போன்றும் தலைவி போன்றும் மூவகையாகப் பேசுவதால் 'பராங்குச நாயகி' என்றும் அழைக்கப்படுவர். பொருட்செறிவும் கருத்தாழம் பக்தியின் தீவிரம் அணிகளின் அழகு ஆகிய பலவகை நலன்களும் அமைந்துள்ளன.

பிறிதோரிடத்தில் வண்டுகளைப் பார்த்து, எந்த மலருக்காவது வைகுந்தன்வாய் மணம் உண்டா என வினவுகிறார். ஆண்டாள் மாதவன் கையிலுள்ள சங்கை விளித்துக் கேட்டதுபோல, மாதவன் தன் வாய்ச்சுவையும் நாற்றமும் விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்லாழி வெண்சங்கே என்கிறார்.

''வண்டுகளோ வம்மின்! நீர்ப்பூ நிலப்பூ மரத்தி லொண்பூ
உண்டு களித்துழல்வீர்க் கொன்று ரைக்கியம் ஏனமொன்ருய்
மண்துக ளாடி வைகுந்தமன்னுன் குழல்வாய் விரைபோல்
விண்டுகள் வாரும் மலருளவோ நும் வயலிடத்தே''

வானமெல்லாம் திரிந்து நீர் சுமந்து உடல்நோகத் தவம் செய்தால் தான் மேகங்கள் திருமால் திருமேனியை ஒக்கும் கரிய நிறம் பெற்றதாக ஆழ்வார் சொல்வதுடன், நிற்காமல் மின்னலோடு கூடிய மேகம், திருவோடு கூடிய திருமால் என்கிருர். மற்றும், திருமாலடியார்கட்குத் தீவினை வராது என்கிருர் ஆழ்வார்,

''திருமால் உருவொக்கும் மேரு அம் மேருவில் செஞ்சுடரோன்
திருமால் கைசக்கர மொக்கும் அன்ன கண்டும்
திருமால் உருவோடு அவன் சின்னமே பிதற்று நிற்பதோர்
திருமால் தலைக்கொண்ட நாங்கட்கு எங்கேவரும் தீவினையே?''

ஆழ்வார், வெண்ணெய் உண்ட கள்வனையன்றி வேருெருவரையும் நினையாது தன் நெஞ்சமே' என்கிருர்.

''சுருங்குறி வெண்ணெய் தொடுஉண்ட கள்வனை வையம் முற்றும்
ஒருங்குற உண்ட பெருவயிற் ருளனை மாவலி மாட்டு
இருங்குற ளாகி இசையவோர் மூவடி வேண்டிச் சென்ற
சுருங்குறி யானையல்லால் அடியேன் நெஞ்சம் பேணலதே''

சாமவேத சாரமாகிய திருவாய்மொழியில், தமது பக்தி அனுபவத்தையும், தாம் பெற்ற அமுதமாகிய வேதாந்த ஞானத்தையும் உலக மக்கள் உய்ய அருளிச் செய்துள்ளார், நம்மாழ்வாரே திருவாய்மொழி முதலியவற்றைத் தொண்டர்கட்கு அமுதமாகவும் இன்பமாரியாகவும் வழங்கியதாகச் சொல்லுகிருர்.

''தொண்டர்க்கு அமுது உண்ணச்
சொல் மாலைகள் சொன்னேன்''

''வண்டமிழ் நூற்க நோற்றேன்
அடியார்க்கு இன்பமாரியே''

திருவாய்மொழி காட்டும் ஐம்பெரும் பொருள்களைக் கீழ்க்கண்ட பட்டர் பாசுரம் தெரிவிக்கிறது, இறைவன் நிலை, ஜீவாத்மாவின் நிலை, பக்தி நெறி, அதற்குத் தடையாக இருக்கும் ஊழ்வினை, வாழ்க்கையில் கைங்கர்யம் என்பன அந்த ஐம்பெரும் பொருள்களாகும். அவை அர்த்த பஞ்சகம் எனவும் கூறப்படுகின்றன. அவை வேத சாரமானவை.

''மிக்க இறைநிலையும் மெய்யாம் உயர் நிலையும்
தக்க நெறியும் தடையாகித்—தொக்கியலும்
ஊழ்வினையும் வாய்வினையும் ஓதும் குருகையர்கோன்
வே தத்து இயல்''

மற்றும் திருவின் சம்பந்தத்தால் பகவானுக்குப் பல நன்மைகள் உண்டாயின வாம், அப்படிப்பட்ட நலன்களில் நம்மாழ்வார் செய்த திருவாய்மொழி ஆயிரம் சிறப் புடையது என்கிருர் கம்பநாட்டாழ்வார்.

''சேராதன உளவோ திருச்சேர்ந்தார்க்கு வேதம் செய்யும்
பேராயிரம் முடியாயிரம் நறை பெய்துள பத்
தாயிரம் திருக்குருகூர்ச் சடகோபன் சொன்ன
ஆராவமுதக் கவியோர் ஆயிரம் அவ்வரியி னுக்கே'

''உயர்வற, திண்ணன் விடு, அணவது ஒன்றும், தேவும் இந்த நான்கு திருப்பதிகங்களும் இறை நிலையையும்; பயிலும் சுடரொளி, ஏருளும் இறையோனும், கண்கள் சிவந்த, கருமாணிக்கம் என்ற நான்கு திருப்பதிகங்களும் உயிரின் நிலை யையும்; நோற்ற நோன்பு, ஆருவமுதே, மாஞேய் நோக்கு, பிறந்தவாறும் இந்த நான்கும் இறைவனை அடையும் வழியினையும்; எம்மா விடு, ஒழிவில் காலம், நெடுமாற் கடிமை, வேய்மருதோளிணை ஆகியன பேற்றின் தன்மையையும்; வீடுமின் முற்றம், சொன்னல் விரோதம், ஒரு நாயகமாய், கொண்ட பெண்டிர் இந் நான்கும் தடை களின் நிலையினையும் கூறுவனவாகும் என்பர் ஆன்ரோர். மற்றைய 80 பதிகங்களும் இவ்வைந்து பொருள்களையும் விரித்துக் கூறுவனவாக அமைந்துள்ளன. திருவாய் மொழியில் த்வயத்தின் பொருள் கூறப்படுகிறது. இறைவனுக்கும் உயிருக்கும் உள்ள சம்பந்தம் கூறப்படுகிறது. முக்கிய நோக்கம் வீடு பேறு.''

[கலைக்களஞ்சியம்]

திருவாய்மொழி என்பதற்கு 'திருநாவிறுடையபிரான் சத்தியவாக்கு' என்று பொருள். நம்மாழ்வார் தம் பாசுரங்கட்கு இட்ட பெயர்' அவாவிலந்தாதி ஆயிரம்' என்பதாகும். பக்திப் பரவசத்தால் வெளிவந்து அந்தாதித் தொகையில் அமைந்த பாசுரம் என்று பொருள்.

நம்மாழ்வார் தம் பாசுரங்களில் உலக வாழ்வின் இன்னல்களை மக்களுக்கு எடுத்துக்காட்டி நல்வழிப்படுத்த முயற்சிக்கிருர். உலக வாழ்வு இன்னல்கள் நிறைந்தது. அநித்தியமானது. நீர் மேற் குமிழி என மறையக்கூடியது. முடிசேர் மன்னரும் ஒரு நாள் பிடிசாம்பலாவர் என்கிருர்.

''வாழ்ந்தார்கள்வாழ்ந்தது மாமழை மொக்குளின் மாய்ந்து மாய்ந்து
ஆழ்ந்தார் என்று அல்லால் அன்றுமுதல் இன்று அறுதியா
வாழ்ந்தவர்கள் வாழ்ந்தே நிற்பதென் றில்லை
அடிசேர் முடியினராகி அரசர்கள் தாம் தொழ
இடிசேர் முரசங்கள் முற்றத்துஇயம்ப இருந்தவர்''

பொருள் இருக்கும் வரைதான் ஒருவனை மக்கள் சுற்றம் முதலியோர் உறவு கொண்டாடிச் சுற்றுவர். பொருளற்று விட்டால் அவன் துயர் துடைக்க ஒருவரும் முன்வர மாட்டார்கள். ஏனென்று கூடக் கேட்கமாட்டார்கள். சுற்றம் மக்கள் என்று சொல்லிக் கொள்ள வெட்கப்படுவர். ஆகவே, உறுதிப் பொருளாய் எங்கும் நிறைந்த அப்பரம்பொருளை வழிபட வேண்டுமென்கிருர் ஆழ்வார். அவன்,

''திட விசும்பு எரிவளி நீர்நிலம் இவைமிசை
படர்பொருள் முழுதும் ஆய அவை அவை தொறும்
உடல்மிசை உயிரெனக் கரந்து எங்கும் பரந்துளான்
சுடர்மிகு சுருதியு ளிவையுண்ட சுரனே''

என்கிறார்.

மற்றும் ஆழ்வார், மக்கள் உலகில் படும் துன்பத்திற்கு ஏங்குகிறார். துன்பமய மான உலக இயற்கையைப் படம் பிடித்து நம் கண்முன்னே நிறுத்துகிறார்.

''நண்ணாதார் முறுவலிப்ப நல்லுற்றார் கரைந்தேங்க
எண்ணாராத் துயர்விளைக்கும் இவையென்ன உலகியற்கை''

''காமாறும் கெடுமாறும் தமருற்றார் தலைத்தலை பெய்து
ஏமாறிக் கிடந்தலற்றும் இவையென்ன உலகியற்கை''

''கொண்டாடட்டும் குலம்புனைவும் தமருற்றார் விழுநிதியும்
வண்டார்பூங் குழலாளும் மனையொழிய வுயிர்மாய்தல்
கண்டாற்றேன் உலகியற்கை''

''வாங்குநீர் மலருகில் நிற்பனவும் திரிவனவும்
ஆங்குயிர்கள் பிறப்பிறப்புப் பிணிமூப்பால் தகர்ப்புண்ணும்
ஈங்கிதன்மேல் வெந்நாகம் இவையென்ன உலகியற்கை''

''கண்டு கேட் டுற்றுமோந் துண்டுழலும் ஐங்கருவி
கண்ட இன்பம் தெரிவரிய அளவிலாச் சிற்றின்பம்''

இத்தகைய துன்பம், உலகத்தினின்று தன்னைக் காத்து அவன் திருவடியே சுமந்துழலக் கூட்டி வைக்க வேண்டுமென்கிறார் ஆழ்வார். மற்றும், அவன் அருளைப் பெறுவது எளிது என்கிறார். தன்னைத்தானே உரலினோடு கட்டுண்ணப் பண்ணிக் கொண்டவனாயிற்றே. அவன் பத்துடை அடியவர்க்கு எளியவன். ஆகவே பக்தி செய்து அவன் அருளைப் பெறலாமென்கிறார் அவர். அது சுலபமும் கூட.

''பத்துடை அடியவர்க் கெளியவன் பிறர்களுக்கரிய
வித்தகன் மலர்மகள் விரும்பும் நம் அரும்பெற லடிகள்
மத்துறு கடை வெண்ணெய் களவினில் உரலிடை யாப்புண்டு
எத்திறம் உரலினோடி ணைந்திருந் தேங்கிய எளிவே''

திருமாலுக்கடிமை செய்து உய்ய வேண்டும். வேறு பயனை கருதாது அவனை அணுகில் அவன் நம்மை அணுகுவான். வேறுபயன் கருதி அகன்றால் அவனும் நம்மை விட்டு அகல்வான். ஆகவே பயன் கருதாது அப்படிப்பட்ட எம்பெருமானை இரவும் பகலும் புகழ்ந்து தோய்ந்து அனுபவிப்பதில் இளைக்கக்கூடாது என்கிறார் ஆழ்வார்.

''அகலில் அகலும் அணுகில் அணுகும்
புகலு மரியன் பொருவல்லன் அம்மான்
நிகரில் அவன் புகழ்பாடி இளைப்பிலம்
பகலுமிரவும் படிந்து குடைந்தே.

பூர்ணவதாரங்களான, இராம-கிருஷ்ண அவதாரங்களில் நம்மாழ்வாருக்கு ஈடுபாடு அதிகம. கண்ணன் சிறப்பு பற்றி அவர் கூறுகிறார். 'எல்லாம் கண்ணன்; அவன் பூபாரம் தீர்க்கவே வடமதுரையில் தோன்றினான்; உய்ய வேண்டுமெனில் அவனடி சேருங்கள்'' என்கிறார் ஆழ்வார். திவ்விய தேசங்களில் கோயில் கொண்டிருக்கும் எம்பெருமான் வடிவழகிலேயே ஈடுபடுகிறார்.

இராமாவதாரச் சிறப்பைப் பற்றிக் கூறும் போது, அவர் இராமபிரானைத்தான் கற்க வேண்டுமென்கிறார். அவன் புல் எறும்பாகி வாழும் சராசர முற்றவும் பொன்னுலகம் அடையச் செய்தான் என்பதை,

கற்பார் ராம பிரானை அல்லால் மற்றுங் கற்பரோ
புற்பா முதலாப் புல்லெறும் பாதி யொன்றின் றியே
நற்பால் அயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும்
நற்பாலுக் குய்த்தனன் நான்முக ஞர்பெற்ற நாட்டுளே.

## நாயக-நாயகி பாவம்

நம்மாழ்வார், நாயகி, நாயக பாவத்தில் இறைவனை நாயகனாகவும், தன்னை நாயகியாகவும் பாவனை செய்து கொண்டு பாடிய பாசுரங்கள், படித்து இன்புற வேண்டியவை. இவற்றைத் திருவிருத்தத்தில் காணலாம்.

கிள்ளைவிடு தூதாய் அமைந்தது கீழ்வரும் பாசுரம். நெடுமாலுக்கு என் தூதாய்ச் சென்று என் காதல் நிலையைச் சொல்லச் சொன்னேன். ஆனால் நீ சொல்லவில்லை. ஆகவே, நான் உனக்கு இனி இன்னடிசில் ஊட்டமாட்டேன். வேறு யாரையாவது நாடி ஊட்டப்பெறு' என்கிறாள் காதலி.

''நீயலையே சிறுபூவாய்! நெடுமாலார்க் கென் தூதாய்
நோயெனது நுவலென்ன நுவலாதேயிருந்தொழிந்தாய்
சாயலொடு மணிமாமை தளர்ந்தேன்நான் இனியுனது
வாயலகில் இன்னடிசில் வைப்பாரை நாடா யே.''

நெஞ்சை விளித்துச் சொல்லுவதாக அமைந்த பாசுரம் நம் நெஞ்சைத் தொடுவதாக அமைந்துள்ளது. நெஞ்சமே நீயும் என்னை விட்டு நீங்கி என் காதலனிடம் சென்று விட்டாய். இந்த இரவோ ஊழிக்காலமென நீண்டுகொண்டே செல்லுகிறது. என் காதலனாகிய வெஞ்சிலைக் காகுத்தனும் வந்தானில்லை. துயரம் தீரச்செத்தொழியலாமென்றால் வழி தெரியாது திகைக்கிறேன், பெண்ணாய்ப் பிறந்து இப்படி வாடுவதைத் தவிர என்ன பாக்கியத்தைப் பெற்றேன் யான்?'

வேதசாரமான இவர் பாசுரங்களைப் படிக்காவிட்டால் திருமாலருள் கிட்டாது என்கிறார் ஒரு சான்றோர்.

நம்மாழ்வார்தான் வைணவ தரிசனத்திற்கு முதல் பிரவர்த்தகர். பின்னால் வந்த ஆசார்யர்களின் கிரந்தங்களுக்கெல்லாம் மூலப்பொருளாய் விளங்கியது நம்மாழ்வாரின் திருவாய்மொழியும் மற்றப் பிரபந்தங்களுமாகும் என்பர் சான்றோர். வைணவ சமயம் தழைக்க வைணவக் கருத்துக்களைச் சிறப்பாகத் தம் பாசுரங்களில்

வெளியிட்டுள்ளார். திருமாலின் பரத்துவத்தைத் தெளிவுபடுத்தியுள்ளார். திருமால் பக்தியோடு திருமாலடியார்களிடம் பக்தியும் தேவை என்பதை,

'திருமால் திருப்பேர் வல்லார் அடிக்கண்ணி சூடிய மாறன்' என்று சொல்லுவதிலே வெளிப்படுத்துகிறார். பிற சமயக் காழ்ப்பு இவருக்குஇல்லை என்பது,

''அவாவறச் சூழ் அரியை அயனை அரனை அலற்றி
அவாவற்று விடுபெற்ற குருகூர்ச் சடகோபன்''

சொன்னதென்பதிலிருதும்,

''ஒன்றெனப் பலவென அறிவரும் வடிவினுள் நின்று
நன்றெழில் நாரணன் நான்முகன் அரனெனு மிவரை
ஒன்றநும் மனத்துவைத் துள்ளிநும் இருபசை யறுத்து
நன்றென நலஞ் செய் தவனிடை நம்முடை நாளே''

என்பதிலிருந்தும் தெளியலாம். 'அவாவறச் சூழ் அரியை அயனை அலற்றி' என்பதற்கு, நான்முகனுக்கும் சிவபெருமானுக்கும் அந்தர்யாமியாயுள்ள நாராயணனைத் தொடர்ந்து கூப்பிட்டு என்ற பொருள் தருகிறது வியாக்கியானம். எல்லாக் கடவுள் வடிவமும் திருமாலே; பிரிந்து இவ்வாறு நின்று அவரவர் கொள்கைக்கு ஏற்ப அருளும் வடிவங்களே என்கிறார் ஆழ்வார்.

சாதி வேற்றுமையைக் களையச் சாதிகள் இல்லை தொண்டக்குலம் என்ற ஒன்றுதான் உள்ளது என்கிறார். திருமாலடியவர்கள் நாம் காணும் வகையில் எவ்வளவு தாழ்ந்த குலத்தவரேனும் திருமாலடியவர்களாயின், அவர்களே வணங்கத் தகுந்தவர்கள் என்கிறார் ஆழ்வார்:

''குலந்தாங்கும் சாதிகள் நாலிலும் கீழிழிந்து எத்தனை
நலந்தா னிலாத சண்டாள சண்டாளர்க ளாயினும்
வலந்தாங்கு சக்கரத் தண்ணல் மணிவண்ணற்கு ஆள் என்றுஉள்
கலந்தார் அடியார் எம் அடிகளே!''

''பயிலும் சுடர்ஒளி மூர்த்தியைப் பங்கயக் கண்ணனை
பயில இனிய நம் பாற்கடல்சேர்ந்த பரமனை
பயிலும் திருவுடையார் எவரேலும் அவர் கண்டீர்
பயிலும் பிறப்பிடை தோறும் எம்மைஆளும் பரமரே''

### கரந்து எங்கும் பரந்துளான்

அவன் எங்கும் பரந்துளான் என்பதை,

''திடவிசும்பு, எரி, வளி, நிலம் இவை மிசை
படர் பொருள் முழுவதும் ஆய் அவை அவைதொறும்
உடல் மிசை உயிரெனக் கரந்து எங்கும் பரந்துளன்
சுடர்மிகு சுருதியு ளிவையுண்ட சுரனே.''

என்றும்,

பரந்ததன் பரவையும் நீர்தொறும் பரந்துளான்
பரந்த அண்டம் இதுவென நிலம்விசும்பு ஒழிவறக்
கரந்த சில இடந்தொறும் இடம்திகழ் பொருள்தொறும்
பரந்து எங்கும் பரந்துளான்''

என்றும் சொல்லுகிறர்.

தனித்தன்மையைச் சொல்லிய அவர் காழ்ப்புணர்ச்சி ஏற்படாமலிருக்க, மூவரில் யாரையேனும் மனதில் நிறுத்தி யாரை எண்ணி வணங்கினுலும் வணங்கலாம். பசையறுக்கலாம் என்கிறர். அது திருமாலை வணங்கியதே என்கிறர்.

''ஒன்றுஎனப் பலவென அறிவு அரும் வடிவினுள் நின்ற
நன்றுஎழில் நாராணன் நான்முகன் அரன் எனுமிவரை
ஒன்றநும் மனத்துவைத்து உள்ளறும் இருபசை யறுத்து
நன்றுஎன நலம் செய்வது அவனிடை நம்முடை நாளே.''

நம்மாழ்வாரும், மற்றை ஆழ்வார்களைப் போல 'ஒரு கடவுள் கொள்கை' உடையவர். நம்மாழ்வாருக்கு உண்ணுஞ் சோறும் பருகும் நீரும் தின்னும் வெற்றிலையும் எல்லாமே கண்ணன்.

'ஒன்று என்றும் பலவென்றும் அறிவதற்கு முடியாத வடிவினில் நிற்கின்ற நாரணன், அயன், அரன் என்னும் மும்மூர்த்திகளை நம் மனத்துள் வைத்துத் தியானித்து இரு பசை அறுத்து நற்கருமம் செய்வதில் நாளைக் கழிப்போமாக' என்று மேம்போக்கான் பொருள்தந்த போதிலும் இதற்கு முன்பாசுரத்தை உன்னக் கீழ்க்கண்ட பொருள் தெளிவாகும்:

'மும்மூர்த்திகளைப்பற்றி மனத்தில் இருத்தினல், உணர்ந்து உணர்ந்து ஏதேனும் ஒரு மூர்த்தியிடம் பக்தி ஏற்படும். அந்த மூர்த்தியை நாமம் சொல்லி ஏத்துமின்' என்கிறர் ஆழ்வார். ஒருவரைப் பின்பற்றிய மற்றை இருவர்பாலும் முன் சேர்த்துப் பார்த்தபோது ஏற்பட்ட பசையை, ஒட்டுதலை அறுத்து, ஒன்றே நன்றெனக் கொள்க. இதுவே ஆழ்வார் காட்டும் வழி. வைணவர்கள் நாராயணன் என்று உணர்ந்தால் மற்ற இருவர்பாலுள்ள ஒட்டுதலைத் தவிர்ப்பர். சைவர் சிவனே என்று உணர்ந்தால் அவனைப்பற்றி, மற்ற இருவர் அரி. அயன் ஆகியோரின் ஒட்டுதலைத் தவிர்ப்பர் என்பதாம். இது கடவுள் ஒருவரே என்ற கொள்கையை வலியுறுத்துகிறது. மற்ற வரை இழிவு படுத்துவது என்ற பொருளல்ல. ஒன்றைப்பிடி; அதை உறுதியாய்ப் பிடி என்பதாம். இதோ அந்தப் பாசுரம்:

''உணர்ந்து உணர்ந்து இழிந்து அகன்று
உயர்ந்து உருவியந்த இந்நிலைமை
உணர்ந்து உணர்ந்து உணரிலும் இறை நிலை
உணர்வரிது உயிர்காள்!
உணர்ந்து உணர்ந்து உரைத்து உரைத்து
அரி அயன் அரன் எனும் இவரை
உணர்ந்து உணர்ந்து உரைத்து உரைத்து
இறைஞ்சுமின் மனப்பட்டது ஒன்றே.

அகங்கார மமகாரங்களை அறுத்தால்தான் இறையை அடைய முடியும் என்பதை,

'நீர் நுமது என்று இவைவேர் முதல் காய்ந்து இறை
சேர்மின் உயிர்க்கு அதன் நேர்நிறை இல்லை'

எனக் கூறுகிறார்.

நம்மாழ்வார் பாசுரங்கள் இறைவன் பாசுரங்களே யாகும்.

## நம்மாழ்வாரின் திருவுள்ளம்

பல வடிவுகளில் அறியப்படுகிற நன்றெழில் நாரணன், நான்முகன், அரன் எனும் இவரில் யாரையேனும் ஒருவரை மனத்துள் வைத்து உன்னினால், இறைவன் அருள்கிட்டும் என்கிறார். திருமாலின் பரத்துவத்தில் அசையா நம்பிக்கையுடைய இவர், எல்லா உயிரிலும் கரந்து கலந்து நிற்கும் திருமகள் கேள்வன் அருள்புரிவான் என்கிறார்.

''முக்குணங்களின் வசப்பட்ட உலகமக்கள் தாம் அறிந்த வகைகளாலே அறியப்பட்ட தேவர்களே இறைவர் ஆவர் என நினைந்து, அத்தேவர்களுடைய பாதங்களையே பற்றுக் கோடாகப் பற்றுகிறார்கள். அவர்களால் கூறப்படுகிற தேவர்கள் இறைவர் என்று கூறப்படுவதற்குக் குறைவில்லாதவர்களாவே இருக்கிறார்கள். அத்தேவர்கள் தங்கள் ஆகமங்களில் விதித்த வழியால் அவர்களை வணங்குகிற மக்கள், தாம் விரும்பிய பலன்களைப் பெறுவர்.''

''அவரவர் தமதம தறிவறி வகைவகை
அவரவர் இறையவர் எனவடி வடைவார்கள்
அவரவர் இறையவர் குறைவிலர் இறையவர்
அவரவர் விதிவழி அடைகின் றனரே''

என்கிறார் நம்மாழ்வார். இவ்விதமாகச் சமயப் பூசலுக்கு முற்றுப் புள்ளி வைக்கிறார். விதிவழி என்பது அவரவர்க்குரிய தவத்திற்கேற்ப என்று பொருள்படும்.

மக்கள், தாம் அறிந்தவாறு பல மூர்த்தி வடிவங்களை எழுதியும் சிற்பம் செய்தும் தொழுவார்கள். அவரவருக்கு இஷ்டப்பட்ட வடிவமும் பெயரும் நிறமும் வைத்துக் கொள்ளட்டும். அவர்கள் நினைத்தபடியாகவே தன்னை அமைத்துக் கொண்டு இறைவன் அருள் செய்வான் என்பது ஆழ்வாரின் சித்தம். பிரபத்தி நிலையே இவர் நெறி. முற்றிலும் எம்பெருமானைச் சரணடைய வேண்டும். ஆழ்வார் சொல்லுகிறார், ''நான் விரதம் காக்கவில்லை ஞானமும் இல்லை. உன் திருவடிகளைப் பற்றிச் சரணடைகிறேன். உன்னை விடமாட்டேன்'' என்கிறார்,

''நோற்ற நோன்பு இலேன்; நுண்ணறிவு இலேன்
ஆகிலும் இனி உன்னை விட்டு ஒன்றும் ஆற்றகிற் கின்றிலேன்''

அவன் அருளுக்குரிய முக்கிய நிலைக்களனாகத் தன்னை ஆக்கிக் கொள்ளும் அளவே, ஆன்மா செய்யக்கூடிய முயற்சியாகும்.

எம்பெருமான் தன் அடியார்களுக்கு எவ்வளவோ நன்மை செய்தும், இன்னும் என்ன செய்வோம் செய்வோம் என்று இருக்கிருராம். இந்தச் சிந்தையே பக்தனுக்குப் போதும்; மோட்சம் எதற்கு என்கிருர் ஆழ்வார் பகவானை நினைந்து, அவன் கல்யாண குணங்களில் ஈடுபட்டிருப்பதே போதும் என்பது ஆழ்வார் கருத்து.

''ஒன்றுண்டு செங்கண்மால்! யான் உரைப்பது உன் அடியார்க்கு
என் செய்வேன் என்றே இருத்திநீ! நின்புகழில்
வைகும்தன் சிந்தையிலும் மற்றினிதோ நீ அவர்க்கு
வைகுந்தம் என்றருளும் வான்.''

அவதார காலங்களில் வாழும் பாக்கியம் இல்லாத நாம் திவ்விய தேசங்களில் மூர்த்தம் கொண்டுள்ள அர்ச்சா மூர்த்தங்களை வணங்கி வாழ்த்தி வழிபட வேண்டுமென்கிருர். நாமும் நம்மாழ்வார் காட்டும் நெறிநின்று இறையருள் பெறுவோமாக.

## திருவாய் மொழிக்கு வியாக்கியானங்கள்

திருவாய்மொழி எனச் சிறப்பிக்கப்படுவது நம்மாழ்வார் அருளிய 'உயர்வற உயர்நலம்' பாசுரம் முதல், அவாவறச் சூழ் 'அரியை அயனை அரனை அலற்றி' பாசுரம் ஈருக உள்ள 1102 பாசுரங்களைக் குறிக்கும். பகவத் விஷயமாகிய திருவாய் மொழிக்கு விரிவுரைகள் ஐவர் ஆக்கியுள்ளனர். அவை பிள்ளான் என்பவரால் செய்யப்பட்ட ஆராயிரப்படி, நஞ்சீயால் செய்யப்பட்ட ஒன்பதாயிரப்படி, அழகிய மணவாளஜீயரால் ஆக்கப்பட்ட பன்னீராயிரப்படி, பெரிய வாச்சான் பிள்ளையால் செய்யப்பட்ட இருபத்து நாலாயிரப்படி, நம்பிள்ளை அருளிச் செய்ய வடக்குத் திருவீதிப் பிள்ளையால் பட்டோலைப் படுத்தப்பட்ட ஈடு முப்பத்தாருயிரப்படி ஆகியவையாகும். ஈடு வியாக்கியானத்திற்கு ஈடு எதுவும் இல்லை; எனவே இது ஈடு எனப்பட்டது என்பர். ''நம்பிள்ளை சொன்னதை வடக்குத் திருவீதிப்பிள்ளை ஏட்டில் இட்டு வைத்ததால் 'ஈடு' என்று இவ்வியாக்கியானத்தைக் கூறுவதும் உண்டு. கற்பவரை இது இறைவனிடத்தும் ஆழ்வாரிடத்தும் திருவாய்மொழியிடத்தும் ஈடுபடச் செய்வதால் 'ஈடு' என்று பெயர் பெற்றதாகச் சொல்வதும் உண்டு.'' இந்த வியாக்கியானத்தை எம்பெருமானே கேட்டு மகிழ்ந்த பெருமையும் இதற்கு உண்டு. ஈட்டின் நடையழகும் பொருளழகும் சிறப்பு வாய்ந்தன. திருவாய் மொழியில் கழிதல் புகுதல் ஏற்படாவண்ணம் காக்கும் கவசமாகவும் இது விளங்குகிறது.

படி என்ருல் அளவு என்று பொருள். ஆருயிரம் கிரந்தங்களைக் கொண்டது ஆருயிரப்படி. ஒரு கிரந்தம் என்பது உயிரும் உயிர்மெய் எழுத்துமாக முப்பத்திரண்டு எழுத்துக்களைக் கொண்டது. இதில் ஒற்றெழுத்துக்களைக் கணக்கிடுவதில்லை. கீழ்க் கண்டவாறு உபதேச ரத்தினமாலைச் செய்யுள் அதனை வலியுறுத்துகிறது.

''பிள்ளான் நஞ்சீயர் பெரியவாச் சான்பிள்ளை
தெள்ளார் வடக்குத் திருவீதிப்—பிள்ளை
மணவாள யோகி திருவாய் மொழியைக் காத்த
குணவாள ரென்றுநெஞ்சே கூறு.

பெரிய வாச்சான் பிள்ளை திருவாய்மொழிக்கு மட்டுமன்றி, மற்றையத் திவ்விய பிரபந்தங்கட்கும் வியாக்கியானம் எழுதியுள்ளார். இவருடையவை சுருக்கமும் விளக்கமும் கொண்டவை. ஸ்ரீ வேதாந்த தேசிகரும் திருவாய்மொழித் திவ்வியப்

பிரபந்தங்கட்கு வடமொழியில் வியாக்கியானம் எழுதியுள்ளார். அவற்றுள் சில இன்னும் கிடைக்கவில்லை.

நம்மாழ்வாரைப் பற்றிய நூல்களுள் சில பின்வருமாறு. அவை:

சடகோபரந்தாதி, திருவாய்மொழி. நூற்றந்தாதி, மாறனலங்காரம், மாறன் பாப்பாவினம், மாறன் திருப்பதிக் கோவை, ஆசாரிய இருதயம் முதலியனவாம்.

## வகுள பூஷண நாயகியின் திருமாற் காதல்

வகுளபூஷண நாயகி திருமாற் காதல் கொண்டு, அவரைப் பிரிந்த பிரிவாற் றுமையால் பெருமூச்சு விடுகிறள். இனிமையாகக் கூவும் குயிலொலியும், அழகாகத் தோகையை விரித்தாடும் மயிலின் ஆடலும், அவளுக்கு இப்பொழுது இன்பம் பயக்க வில்லை. மல்லிகை மணம் வீசவில்லை. மாலை வரவர மயக்கம் அதிகமாகிறது. பித்துத் தலைக்கேறுகிறது. திருமால் கண்ணன் குழலூதி மயக்கிக் கெஞ்சிக் கொஞ்சி இன்முகம் காட்டிக் கண்களால் காதல் பேசி இதோ வருகிறேன் என்று சொல்லிப் போனவர், இன்னும் வரவில்லையே என ஏங்குகிறள் பேதை. மாலை நேரம் வந்து விட்டது. ஆனல் மாயன் வரவில்லையே?

''ஊதுமத் தீங்குழற்கே யுய்யேன்நான்
  அதுமொழிந் திடையிடைத்தன் செய்கோலத்
தூதுசெய் கண்கள்கொண்டு ஒன்றுபேசித்
  தூமொழி இசைகள்கண்டு ஒன்று நோக்கிப்
பேதுறும் முகம்செய்து நொந்துநொந்து
  பேதைநெஞ் சறவறப் பாடும்பாட்டை
யாதுமொன் றறிகிலம் அம்ம அம்ம!
  மாலையும் வந்தது மாயன் வாரான்!''

'பசுக்கள் மீதுள்ள அன்புகூடக் காதலனுக்குத் தன்மீது இல்லையே, எனப் பேதுறுகிறது கோதையின் நெஞ்சம்.

''பாவியேன் மனத்தே நின்று ஈருமாலோ
  வாடைதண் வாடைவெவ் வாடை யாலோ
மேவுதண் மதியம்வெம் மதியமாலோ
  மென்மலர்ப் பள்ளிவெம் பள்ளியாலோ
தூவியம் புள்ளுடைத் தெய்வவண்டு
  துதைந்தஎம் பெண்மையம் பூவிதாலோ
ஆவியின் பரமல்ல அகைகளாலே
  யாமுடை நெஞ்சமும் துணையன்றுலோ!''

காதல் செய்த கண்ணன் கருத்திலே நின்று நினைக்கும் போதெல்லாம் பிரிவுத் துன்பம் வாட்டுகிறது. குளிர்ந்த வாடைக்காற்று வெம்மையாக இருக்கிறது. தண் மதியம் வெம்மதியமாகப் பொசுக்குகிறது. மென்மலர்ப் பஞ்சணை முட்படுக்கையாக இருக்கிறது. நெஞ்சமும் அவரை அடைந்து துணைசெய்ய மறுக்கிறது. இவை

எல்லாம் கண்ணன் என்னும் கருவண்டுகள் பெண்மை என்னும் பூவில் பட்டதால் தான் என நினைக்கிருள் காதலி.

தாமரைச் கண்ணும் செவ்வாயும் நீலப் பனியிருங் குழல்களும் நான்கு தோளும் கொண்ட தனி இளஞ்சிங்கமன்னுள், மாயன் கள்வன் என்னைக் கட்டித் தழுவிக் கலந்து பிரிந்து போனவன் வரவில்லையாயின், என் இன்னுயிரை என்னல் எப்படிக் காக்கமுடியும் எனக் கவல்கிருள். அவ்வழகனின் காட்சி மனத்தே நின்று வதைசெய்கின்றதே என ஏங்குகிருள்.

சூரிய அஸ்தமனம் அவள்நெஞ்சத்தில் ஒருபுதிய கருத்தைத் தோற்றுவிக்கிறது தன்துன்பம் கண்டு பொருதுதான் சூரியன்கூட அஸ்தமனமாகி விட்டான். சிவந்த வாயும் பெரிய கண்ணும் உடைய ஏறு போன்றவர் வாராது போனல், என் சிந்தை நோயைத் தீர்க்க வல்லவர் யார்? என்கிருள்.

''பெண்பிறந்தார் எய்தும் பெருந்துயர் காண்கிலேன் என்று
ஒண்சுடரோன் வாராது ஒளித்தான்—இம்மண் அளந்த
கண்பெரிய செவ்வாய் எம்கார்ஏறு வாராஞல்
என்பெரிய சிந்தைநோய் தீர்ப்பார்யார் என்னையே!

ஊரிலுள்ளவர்களெல்லாம் உறங்கி விட்டனர். உலகம் இருளில் ஆழ்ந்து விட்டது. இரவும் இரவுபகலென்றும் வேறுபாடின்றி ஒரே இரவாக ஊழிக்காலமென நீண்டுகொண்டே போகிறது. எனக்கோ உறக்கம் வரவில்லை. பகைவர்களை வெல்லும் காகுத்தன் வராவிட்டால் இறந்தாவது ஒழியலாமென்ருல் அதற்கும் வழி தெரிய வில்லையே என்கிருள்.

'நெஞ்சமே! நீயும் என்னைத் தனிமையில் விட்டுவிட்டு அவரிடம் சென்று விட்டாய். பாரெல்லாம் உண்ட பாம்பணையான் வாராது போனல், வல்வினையேன் ஆவியைக் காக்கக் கூடியவர் யார்? யாருமில்லை' என்கிருள்.

''ஊரெல்லாம் துஞ்சி உலகெல்லாம் நள்ளிருளாய்
நீரெல்லாம் தேறியோர் நீளிரவாய் நீண்டதால்
பாரெல்லாம் உண்டநம் பாம்பணையான் வாராஞல்
ஆரெல்லே! வல்வினையேன் ஆவிகாப் பாரினியே.''

''நீயும்பாங் கல்லைகாண் நெஞ்சமே! நீளிரவும்
ஓயும் பொழுதின்றி யூழியாய் நீண்டதாய்
காயும் கடுஞ்சிலைஎன் காகுத்தன் வாராஞல்
மாயும் வகையறியேன் வல்வினையேன் பெண்பிறந்தே''

இப்படியெல்லாம் பிரிவுத்துயரால் தவித்துக் கொண்டிருக்கும் பொழுது வானத்திலிருந்து பனித்துளிகள் விழுகின்றன. தன் உள்ளத்திலுள்ள துயரம் வானத் திற்கும் இருப்பதால்தான், கண்ணீர் விடுகிறது எனநினைக்கிருள், எம்பெருமானைக் காணவேண்டும் என்ற ஆசையால்தான் தன்னைப்போலப் பனிக்காற்றும் கடலும் இரவுபகல் தூக்கமின்றி இரைச்சலிடுகின்றன என நினைக்கிருள்.

தீபம் எரிதலை மாலின்மீது கொண்ட ஆசையால்தான் வெந்து கொண்டிருப்பதாக நினைக்கிறுள்.

''கடலும் மலையும் விசும்பும் துழாய் எம்போல்
சுடர்கொ ளிராப்பகல் துஞ்சாயால் தண்வாடாய்
அடல்கொள் படையாழி அம்மானைக் காண்பான்நீ
உடலம்நோ யுற்ருயோ வூழிதோ றாழியே?''
''ஊழிதோறூழி யுலகுக்கு நீர் கொண்டு
தோழியரும் யாமும்போல் நீராய் நெகிழ்கின்ற
வாழிய வானமே! நீயும் மதுசூதன்
பாழிமையிற் பட்டவன்கட் பாசத்தால் நைவாயே!''
''நொந்தாரக் காதல்நோய் மெல்லாவி யுள்ளுலர்த்த
நந்தா விளக்கமே! நீயும் அளியத்தாய்,
செந்தா மரைத்தடங்கண் செங்கனிவாய் எம்பெருமான்
சுந்தாமத் தண்டுழாய் ஆசையால் வேவாயே!''

(திருவாய்மொழி 2-ம்பத்து 1-4,59)

காதல் மனம் எவ்வளவு அழகாகப் படம் பிடித்துக் காட்டப்படுகிறது!

பொழுது புலர்கிறது. அன்னையையும் தோழியரையும், தன்னை முனியாது தன் நெஞ்சு கொண்டு நோக்கும்படி வேண்டுகிறுள் பராங்குச நாயகி.

''எங்கனேயோ அன்னைமீர்காள்! என்னை முனிவதுநீர்?
நங்கள் கோலத் திருக்குறுங்குடி நம்பியைநான் கண்டபின்
சங்கிஞேடும் நேமியோடும் தாமரைக் கண்களோடும்
செங்கனிவாய் ஒன்றிஞேடும் செல்கின்றதென் நெஞ்சமே.''
''என்நெஞ்சி னல்நோக்கிக் காணீரென்னை முனியாதே
தென்னன் சோலைத் திருக்குறுங்குடி நம்பியைநான் கண்டபின்
மின்னும் நூலும் குண்டலமும் மார்வில் திருமறுவும்
மன்னு பூணும் நான்கு தோளும் வந்தெங்கும் நின்றிடுமே.'ா

இப்படிக் கண்ணனிடம் காதல்கொண்ட வகுள பூஷண நாயகி நம்மாழ்வார் தான். அவர், தனக்குத் திருமாலிடம் உள்ள ஆர்வத்தை நாயகநாயகி பாவத்தில் இவ்வாறு வெளிபடுத்துகிறுர்.

நன்றி : திருமாலடியார்கள்—
ஆசிரியர் : காழியூர் சேஷாத்ரி மணவாளன், பி.ஏ.பி.டி.
சுகந்தா வெளியிடு.



# கண்ணன் சொன்னுன், கம்பனும் சொன்னுன்!

## ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதீச்வர ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சங்கராசாரிய ஸ்வாமிகள்

ஆத்மாதான் எல்லாவற்றுக்கும் ஆதாரம், ஆனுல் அதுவே அவற்றைக் கடந்திருக்கிறது என்ருல் அதெப்படி என்று தோன்றுகிறது; குழப்பமாயிருக்கிறது. ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா கீதையில் இம்மாதிரி பல தினுசாகக் குழப்பிக் குழப்பி, பிறகு ஒரேயடியாகத் தெள்ளத் தெளிவாகப் பண்ணிவிடுவார்.

'நான் எல்லாப் பொருட்களிலும் இருக்கிறேன் எல்லாப் பொருட்களும் என்னிடம் இருக்கின்றன' என்று கீதையில் ஓரிடத்தில் ஸ்ரீ கிருஷ்ண பகவான் கூறுகிருர். (யோமாம் பச்யதி ஸர்வத்ர, ஸர்வம் சமயி பச்யதி). எல்லாப் பொருட்களும் இவரிடம் இருக்கின்றன என்ருல் இவர்தான் அவற்றுக்கெல்லாம் ஆதாரமான ஆத்மா என்ருகும். ஆனுல், எல்லாப் பொருட்களிலும் இவர் இருக்கிருர் என்ருல் அவைதான் இவருக்கு ஆதாரம் என்று ஆகுமே! இதில் எது சரி என்ற குழப்பம் ஏற்படலாம்.

ஸ்வாமி அல்லது ஆத்மாவே எல்லாவற்றுக்கும் ஆதாரம் என்பதுதான் சரி அவர் எல்லாவற்றுள்ளும் இருக்கிருர் என்பதால் அவை இவரைத் தாங்குகின்றன என்று ஆகாது. இவரால் தான் அவற்றுக்கு உருவமும் உயிரும். இவர் இல்லாமல் அவை இல்லை. எனவே அவை இவருக்கு ஆதாரமல்ல, இவர்தான் சகலத்தையும் ஆட்டிப் படைப்பவர். இதை ஸ்ரீ கிருஷ்ணனே தெளிவாகச் சொல்கிருர்.

'பொம்மலாட்டப் பொம்மை மாதிரிதான் சகல பிராணிகளும்; உள்ளேயிருந்து ஈசுவரனே அவற்றை ஆட்டி வைத்துக் கொண்டிருக்கிருன்' [ஈச்வர: ஸர்வ பூதானும் ஹ்ருத் தேசே (அ)ர்ஜுன திஷ்டதி. ப்ராமயன் ஸர்வ பூதானி யந்த்ராரூடானி மாயயா ] என்கிருர்.

இப்படிக் குழப்பத்தைத் தெளிவு செய்கிற பகவான் அதே கீதையில் மறுபடியும் குழப்பம் செய்கிருர். 'எல்லாப் பொருட்களிலும் நான் இருக்கிறேன். எல்லாப் பொருட்களும் என்னிடம் உள்ளன' என்று கூறுபவரே, 'என்னிடத்தில் ஒரு பொருளும் இல்லை' என்கிருர். (ந ச மத் ஸ்தானி பூதானி. ந சாஹம் தேஷு அவஸ்தித:). இங்கே ஆத்மா எல்லாவற்றையும் கடந்தது என்ற தத்துவம் பேசப்படுகிறது.

'இது என்ன குழப்புகிருயே' என்ருல் 'நான் எல்லோருக்கும் விளங்குவதில்லை. (ந அஹம் ப்ரகாச: ஸர்வஸ்ய); அதுதான் என் யோகமாயை (யோக மாயா ஸமாவ்ருத:) என்று ஒரு போடு போடுகிருர்.

'இது என்ன உபதேசம் வேண்டிக் கிடக்கிறது? ஒன்றும் புரியவில்லையே!' என்று தோன்றுகிறதா?

நன்கு ஆலோசித்துப் பார்த்தால் குழப்பத்திற்குத் தெளிவு காணலாம். 'நான் ஒருவருக்கும் விளங்கமாட்டேன்' என்று பகவான் சொல்லியிருந்தால், 'ஆயிரம் பேர் இருந்தால் ஆயிரம் பேருக்கும் விளங்கமாட்டேன்' என்று அர்த்தமாகும். ஆனால் அப்படியின்றி, 'நான் எல்லாருக்கும் விளங்கமாட்டேன்' என்றால், 'ஆயிரம் பேரில் 999 பேருக்கு விளங்காமல் இருந்தாலும் இருக்கலாம், ஒருவனுக்காவது விளங்குவேன்' என்று தான் பொருள். பகவான் 'எல்லோருக்கும் (ஸர்வஸ்ய) விளங்கமாட்டேன்' என்றுரேயன்றி, 'ஒருவருக்கும் (கஸ்யாபி) விளங்கமாட்டேன்' என்று சொல்லவில்லை. அப்படியானால் அவரும் சிலருக்கு விளங்குகிறார் என்றாகிறது.

அந்தச் சிலர் யார்? இவர் சொன்ன யோகமாயையால் பாதிக்கப்படாத ஞானிகள் 'நான் எல்லாப் பொருளிலும் இருக்கிறேன், ஒரு பொருளும் என்னிடம் இல்லை' என்று பகவான் முரண்பாடாகப் பேசியது போலத் தோன்றுவதற்கு இத்தகைய ஞானிகளே விளக்கம் தந்து தெளிவு செய்வார்கள்.

தெருவிலே ஒரு பூமாலை கிடக்கிறது. அரை இருட்டு. எவனோ அந்தப் பக்கம் வந்தவன் அதை மிதித்துவிட்டு, "ஐயோ, பாம்பு! பாம்பு!" என்று பயத்தால் கத்துகிறான்.

மாலையாக இருப்பதும் பாம்பாக இருப்பதும் ஒன்று தான். இது மாலைதான் என்று தெரிந்தவுடன் அவனுக்குப் பாம்பு என்று தெரிந்துவிடுகிறது. ஆனால் முதலில் பாம்புக்கு ஆதாரமாக இருந்தது என்ன? மாலைதான்.

மாலையைப் பாம்பு என எண்ணுவது போல், அஞ்ஞானிகள் ஒன்றேயான பிரம்மத்தைப் பலவான பிரபஞ்சமாகப் பார்த்து மயங்குகிறார்கள். இந்த பிரபஞ்சத்துக்கு ஆதாரம் பிரம்மம்தான்.

'இந்தப் பிரபஞ்சத்துக்குள் நான் இருக்கிறேன். பிரபஞ்சம் என்னிடத்தில் இருக்கிறது' என்று சொன்னால் என்ன அர்த்தம்? 'மாலைக்குள் தான் பாம்பு இருக்கிறது; பாம்புக்குள்தான் மாலை இருக்கிறது' என்பது எப்படியோ அப்படித்தான். இரண்டும் உண்மைதானே?

பாம்பு என்று அலறுபவனுக்குப் பாம்பு மாலையை தனக்குள் 'விழுங்கி' விட்டது அவன் பார்வையில் ஆதாரமாக இருப்பது பாம்பு. அஞ்ஞானம் நீங்கி, 'இது மாலை தான்' என்று உணர்ந்து கொண்டவனுக்கு மாலை பாம்பைத் தன்னுள் மறைத்து விடுகிறது. மாலைதான் ஆதாரமாகத் தெரிகிறது.

மாயையினால் மூடப்பட்டும் பிரபஞ்சத்தைச் சத்தியம் என்று பார்த்தாலும், பிரபஞ்சத்துக்கு ஆதாரமாக இருந்து தாங்குபவன் ஈசுவரன் தான்.

பிரபஞ்சத் தோற்றத்தை ஞானத்தினால் விலக்கியவனுக்கு ஈசுவரனே எல்லாமாய், தானுமாய்த் தோன்றுகிறான். ஈசுவரனைத் தவிர வெறும் தோற்றமாகக்

கூடப் பிரபஞ்சம் என்று எதுவுமே ஞானியின் நிர்விகல்ப சமாதியில் தெரியாது. பிரபஞ்சம் என்றே ஒன்று இல்லாதபோது அது ஈசுவரனிடத்தில் இருப்பதாகவோ, அல்லது ஈசுவரன் அதனுள்ளிருப்பதாகவோ, சொல்வதும் அபத்தம்தானே? அஞ்ஞான தசையில் உடம்பு, பிராணன், மனசு, அறிவு என்றெல்லாம் தெரிகின்றன, ஞானம் வந்தால் ஆத்மானந்தம் புரிகிறபோது இது எதுவுமே இல்லைதான். இது எல்லாவற்றையும் கடந்து தான் அந்த நிலை வருகிறது. இதனால் தான் ஸ்ரீ கிருஷ்ண பகவான் முடிந்த முடிவான ஞான நிலையில் நின்று, 'என்னிடத்திலும் பொருட்கள் இல்லை. நானும் பொருட்களிடத்தில் இல்லை' என்று கூறிவிட்டார். எவனோ அஞ்ஞானி மாலையைப் பாம்பாக நினைத்தான் என்பதால் உண்மையிலேயே ஒரு பாம்பு மாலைக்குள் இருந்ததாகவோ, அல்லது பாம்புக்குள் மாலை இருந்ததாகவோ சொல்லலாமா?

கம்பர் சுந்தரகாண்டத்தில் இதைத்தான் சொல்கிறார்:

'அலங்கலில் தோன்றும் பொய்ம்மை
அரவுஎனப் பூதம் ஐந்தும்
விலங்கிய விகாரப் பாட்டின்
வேறுபா டுற்ற வீக்கம்
கலங்குவ தெவரைக் கண்டால்
அவர் என்பர் கைவி லேந்தி
இலங்கையில் பொருதா ரன்றே
மறைகளுக் கிறுதி யாவார்

அலங்கல் என்றால் மாலை, அரவு என்றால் பாம்பு, 'அலங்கலில் தோன்றும் பொய்ம்மை அரவு'—மாலையில் தோன்றும் பாம்பு என்ற பொய்யான எண்ணம். இது போலப் பஞ்ச பூதங்கள் என்று சேர்ந்து மெய்யான பிரபஞ்சம் என்ற வீக்கமாகி மயக்குகிறதே, அது யாரைக் கண்டால் விலகிப் போய் மாலையான ஈசுவரன் மட்டும் தெரியுமோ, அவர்தான் ராமச்சந்திர மூர்த்தி என்கிறார்.

பரம வைஷ்ணவரான கம்பர் பரமாத்ம ஸ்வரூபத்தை இப்படி ஸ்வச்சமான அத்வைத பாஷையில் சொல்கிறார்.

நன்றி, 'தெய்வத்தின் குரல்.'



# மூன்று காதல்

## மகாகவி சுப்பிரமணிய பாரதியார்

முதலாவது-சரஸ்வதி காதல்

பிள்ளைப் பிராயத்திலே—அவள்
பெண்மையைக் கண்டு மயங்கிவிட் டேனிங்குப்
பள்ளிப் படிப்பினிலே—மதி
பற்றிட வில்லை யெனிலுந் தனிப்பட
வெள்ளை மலரணைமேல்—அவள்
வீணையும் கையும் விரிந்த முகமலர்
விள்ளும் பொருளமுதும்—கண்டேன்
வெள்ளை மனது பறிகொடுத்தேனம்மா ! 1

ஆடிவரு கையிலே—அவள்
அங்கொரு வீதி முனையினில் நிற்பாள், கையில்
ஏடு தரித்திருப்பாள்—அதில்
இங்கித மாகப் பதம்படிப் பாள், அதை
நாடி யருகணைந்தால்—பல
ஞானங்கள் சொல்லி இனிமை செய்வாள், ''இன்று
கூடிமகிழ்வ'' மென்றால்—விழிக்
கோணத்திலே நகை காட்டிசெல் வாளம்மா ! 2

ஆற்றங் கரைதனிலே—தனி
யானதோர் மண்டப மீதினிலே, தென்றற்
காற்றை நுகர்ந்திருந்தேன்—அங்குக்
கன்னிக் கவிதை கொணர்ந்து தந்தாள், அதை
ஏற்று மனமகிழ்ந்தே—''அடி
என்னே டிணங்கி மணம்புரிவாய்'' என்று
போற்றிய போதினிலே—இளம்
புன்னகை பூத்து மறைத்துவிட் டாளம்மா ! 3

சித்தந் தளர்ந்துண்டோ ?—கலைத்
தேவியின் மீது விருப்பம் வளர்ந்தொரு
பித்துப் பிடித்ததுபோல்—பகற்
பேச்சும் இரவிற் கனவும் அவளிடை
வைத்த நினைவை யல்லால்—பிற
வாஞ்சை யுண்டோ ? வய தங்ஙனமே யிரு
பத்திரண்டா மளவும்—வெள்ளைப்
பண்மகள் காதலைப் பற்றி நின்றேனம்மா ! 4

H

## இரண்டாவது—லக்ஷ்மி காதல்

இந்த நிலையினிலே—அங்கோர்
இன்பப் பொழிலி னிடையினில் வேறொரு
சுந்தரி வந்து நின்றாள்—அவள்
சோதி முகத்தின் அழகினைக் கண்டென்றன்
சிந்தை திறைகொடுத்தேன்—அவள்
செந்திரு வென்று பெயர்சொல்லி னாள், மற்றும்
அந்தத் தின முதலா—நெஞ்சம்
ஆரத் தழுவிட வேண்டுகின் றேனம்மா 5

புன்னகை செய்திடுவாள்—அவற்றைப்
போது முழுதும் மகிழ்ந்திருப்பேன் ; சற்றென்
முன்னின்று பார்த்திடுவாள்—அந்த
மோகத்திலே தலை சுற்றிடுங்காண் ; பின்னர்
என்ன பிழைகள் கண்டோ—அவள்
என்னைப் புறக்கணித் தேகிடு வாள், அங்கு
சின்னமும் பின்னமுமா—மனஞ்
சிந்தியுளமிக நொந்திடுவேனம்மா ! 6

காட்டு வழிகளிலே—மலைக்
காட்சியிலே, புனல் விழ்ச்சியிலே, பல
நாட்டுப் புறங்களிலே—நகர்
நண்ணு சிலசுடர் மாடத்திலே, சில
வேட்டுவர் மார்பினிலே—சில
வீர ரிடத்திலும், வேந்தரிடத்திலும்,
மீட்டு மவள் வருவாள்—கண்ட
விந்தை யிலேயின்ப மேற்கொண்டு போமம்மா ! 7

## மூன்றாவது-காளி காதல்

பின்னோர் இராவினிலே—கரும்
பெண்மை யழகொன்று வந்தது கண்முன்பு
கன்னி வடிவமென்றே—கவி
கண்டு சற்றேயரு கிற்சென்று பார்க்கையில்
அன்னை வடிவமடா - இவள்
ஆதி பராசக்தி தேவியடா !—இவள்
இன்னருள் வேண்டுமடா !—பின்னர்
யாவு முலகில் வசப்பட்டுப் போமடா ! 8

செல்வங்கள் பொங்கிவரும் ; நல்ல
தெள்ளறி வெய்தி நலம்பல சார்ந்திடும் ;
அல்லும் பகலுமிங்கே—இவை
அத்தனை கோடிப் பொருளினுள்ளே நின்று
வில்லை யசைப்பவளை—இந்த
வேலை யனைத்தையும் செய்யும் வினைச்சியைத்
தொல்லை தவிர்ப்பவளை—நித்தம்
தோத்திரம் பாடித் தொழுதிடு வோமடா !

ஸ்ரீ:

# ஸ்ரீ பாஞ்சராத்ரம்

## வைஷ்ணவபாததூளி கோஷ்டிபுரம் ராமானுஜதாஸன்

நமது ஸம்ப்ரதாயத்தில் வேதங்கள் தான் முக்கியமான ப்ரமாணங்கள். மற்ற வை அதன் அடிப்படையில் அதற்கு விரோதமன்றியில் தான் ப்ரமாணங்களாகும்.

பௌத்தம் ஜைனம் முதலிய மதங்கள் முழுவதும் வேதத்தை ஒப்புக் கொள்ளாமல் அதற்கு விருத்தமான விஷயங்களைக் கூறுமவையாதலால் நாம் ஏற்றுக்கொள்ளத் தக்கவையல்ல.

நாம் ப்ரமாணங்களாக ஏற்றுக்கொண்ட ஸம்ருதி இதிஹாஸ புராணங்கள், வேதங்களில் நம்மாலறிய முடியாத விஷயங்களையும், தெளிய முடியாதவைகளையும், காணப்படும் வேதங்களில் காணமுடியாதவைகளையும் விளக்கமாக நமக்கு அறிவித்து வழிகாட்டிகளாகின்றன.

ஸ்ரீ பாஞ்சராத்ரமும் அவ்வழியில் இருப்பதொன்று. இது 'ஏகாயன சாகை' என்ற வேத பாகத்தை மூலமாகக் கொண்டது. 'ஏகாயன சாகை' யென்று, ஒன்றி ருப்பதாக சாந்தோக்யோபநிஷத்தில் பூமவித்யா ப்ரகரணத்தில் கூறப்பட்ட 'ऋग्वेदं भगवोऽध्येमि यजुर्वेदंसामवेदं वाको वाक्यमेकायनम्' என்ற வாக்யத்தாலும் ச்ருதப்ரகாசிகை 'ஏகாயன ச்ருதிகள்' என்று சில வாக்யங்களை எடுத்திருப்பதாலும், முன்னோர்களான உத்பலாசார்யர் முதலியோர்களால் காண்பிக்கப்பட்டிருப்பதாலும் அறியப்படுகிறது. அதை விவரிப்பதாலும் விளக்குவதாலும் இந்த 'ஸ்ரீ பாஞ்சராத்ரம்' நமக்கு ப்ரமாண மாகத் தட்டில்லை.

இதற்கு 'பகவச் சாஸ்த்ரம், ஸாத்வத சாஸ்த்ரம், ஸ்ரீ பாஞ்சராத்ராகமம், ஸ்ரீ பாஞ்சராத்ர தந்த்ரம்' என்றும் பல பெயர்கள் உண்டு.

ஜ்ஞாநம், சக்தி, பலம், ஐச்வர்யம், வீர்யம், தேஜஸ் என்ற ஆறு குணங்களும் சேர்ந்து 'பகம்' என்ற பெயரை அடைகின்றன. இதையுடையவன் 'பகவான்' என்றும், அவனையே பரதத்வமாக நினைத்துப் பூஜை செய்பவர்கள் 'பாகவதர்கள்' என்றும், அந்தப் பூஜா முறைகளைக் கூறுவதால் இதற்கு 'பகவத் சாஸ்த்ரம்' என்று பெயர் ஏற்பட்டதென்றும் ஸ்ரீ பாஞ்சராத்ர ஸம்ஹிதைகளில் கூறப்பட்டிருக்கிறது.

அந்தப் பகவான் என்று சொல்லப்படுபவன் வாஸுதேவன் என்ற ஸ்ரீமந் நாராயணனே என்று:

भगवानिति शब्दोऽयं तथा पुरुष इत्यपि ।
निरूपाधीच वर्तेते वासुदेवे सनातने ॥

என்ற வஸிஷ்ட புலஸ்த்ய வரப்ரஸாதலப்த பரதேவதா பாரமார்த்ய வேதியான ஸ்ரீ பராசர ப்ரம்மர்ஷியின் ஸ்ரீ விஷ்ணுபுராண வாக்யத்தால் தெளிவாகின்றது.

ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதாளும் தன்னுடைய ஸூத்ர பாஷ்யத்தில் ஸாங்க்ய, யோக, பாசுபத மதங்களை முழுவதும் அப்ரமாணமாக நிர்த்தாரணம் செய்து ஸ்ரீ பாஞ்ச ராத்ர ப்ரஸ்தாவம் வருமிடத்தில் ஸ்ரீ பாஞ்சராத்ரத்தில் கூறிய அபிகமந, உபாதாந, இஜ்யா, ஸ்வாத்யாய, யோகம் என்று ஐந்து காலங்களாக தினத்தைப் பிரித்துப் பகவானை பூஜை செய்ய வேண்டிய முறைகளையும் தான் இசைவதாகக் கூறி சில பாகங்கள் மட்டும் வேத விரோதமான அர்த்தத்தைக் காட்டுவதால் அப் பாகங்கள் ப்ரமாணமில்லையென்றும் தன்னுடைய ஸூத்ர பாஷ்யத்தில் வெளியிட்டிருக்கிறார். வேதங்களில் ஜீவாத்மாவை நித்யன் (பிறப்பு இறப்பு இல்லாதவன்) என்று கூறப் பட்டிருக்கிறது. ஸ்ரீ பாஞ்சராத்ரத்தில் संकर्षणो नाम जीवो जायते என்று ஜீவனுக்கு பிறப்பு கூறப்பட்டிருப்பதால் இது வேத விரோதமென்று ஸ்ரீ ஆதி சங்கராசார்யரால் காண்பிக்கப்பட்டிருக்கின்றது. இம்மாதிரி இன்னும் சில பாகங்கள் காண்பிக்கப் பட்டிருக்கின்றன இதற்கு சரியான காரணங்களைக் கூறி (அதாவது பகவானுக்கும் பிறப்பிறப்புகள் கிடையாது என்று சொல்லிய வேதமே अजायमानो बहुधा विजायते என்று தன் ஸங்கல்பத்தால் (விருப்பத்தால்) பலவாறுகப் பிறக்கிறுன் என்று கூறியிருப்பதால் அந்த ஸமாதானமே இங்குமொக்கும்.) ஆகம ப்ராம்மண்யத்தில் ஆளவந்தாரும், ப்ரம்ஹ ஸூத்ர பாஷ்யத்தில் ஸ்ரீ பாஷ்ய காரரும், சுருதப்ரகாசிகாசார்யர், ஸ்ரீ தேசிகன் முதலியவர்களும் ஸ்ரீ சங்கராசார்ய வாதத்தை மறுத்து ஸமாதானம் கூறியிருப்பதால் இது பூராவாகப் ப்ரமாணமே என்று அறியக் கிடக்கிறது. பட்டரும், ஸ்ரீ ஆதி சங்கரா சார்யரால் பூராவாக மறுக்கப்பட்ட ஸாங்க்யம், யோகம், பாசுபதம் முதலியவைகளுக் கும் வேத விரோதமில்லாத பாகங்களுக்கு ப்ராமாண்யத்தைத் தமது ஸ்ரீரங்கராஜ ஸ்தவத்தில் :

तस्मात् सांख्यं सयोगं सपशुपतिमतं कुत्रचित्, पांचरात्रं सर्वत्रैव प्रमाण तदिदमवगतं पंचमादेव वेदात् என்று அருளிச் செய்தார்.

ஸ்ரீ பாஞ்சராத்ரம் என்ற பெயர் வந்ததற்குக் காரணம்

(1) पंचायुधास्ते पंच शाण्डिल्यश्चौपगायनः ।
मौञ्ज्यायनः कौशिकश्च भारद्वाजश्च योगिनः ॥

तेमिलित्वा समालोच्य विष्णोराराधनेच्छया ।
अभिसंगम्य तोताद्रौ तपश्चक्रुः सुदुस्तरम् ॥

तेषांतु तपसा तुष्टो वासुदेवो जगत्पतिः ।
आद्यमेकायनं वेदं रहस्याम्नाय संज्ञितम् ॥

दिव्यमन्त्रक्रियोपेतं मोक्षैकफललक्षणम् ।
पंचापि पृथगेकैक दिवारात्रं जगत्प्रभुः ॥

अध्यापयामास यतः तदेतन्मुनिपुंगवाः ।
शस्त्रं सर्वजनैर्लोके पांचरात्रमितीर्यते ॥

(சாண்டில்யர், ஔபகாயனர், மௌஞ்ஜ்யாயனர், கௌசிகர், பாரத்வாஜர் என்ற ஐந்து ரிஷிகள் பகவானைக் குறித்துத் தபஸ் செய்ய அதனால் ப்ரீதியடைந்த பகவான் அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு பகல் ராத்திரியாக ஐந்து நாட்கள் உபதேசம் செய்ததால் இதற்குப் பாஞ்சராத்ரம் என்ற பெயர் ஏற்பட்டது) என்று ஈச்வர ஸம்ஹிதையில் ஒரு காரணம் கூறப்பட்டிருக்கிறது.

(2) भारतः पंचमो वेदः என்றபடி பாரதத்தையும் சேர்த்து நான்கு வேதங்கள் இந்த பாஞ்சராத்ரத்தின் விரிவுரையால் தேடப்படாமல் இருட்டடிக்கப் பெற்றிருப்பதால் இதற்குப் பாஞ்சராத்ரம் என்ற பெயர் ஏற்பட்டிருப்பதாக

पंचेतराणि शास्त्राणि रात्रीयन्ते महान्त्यपि ।
तत्सन्निधौ समाख्याऽसौ तेन लोके प्रवर्तते ॥

என்று பாத்ம ஸம்ஹிதையில் கூறப்பட்டிருக்கிறது.

(3) ஜீவனுக்கு எல்லாவிதமான கெடுதலை உண்டாக்கும் சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்ற ஐந்து விஷயங்கள், ப்ருதிவி, அப், தேஜஸ், வாயு, ஆகாசம் என்ற ஐந்து பூதங்கள் இவை எந்த நல்லறிவால் நன்மை பயப்பவையல்ல என்று இருட்டாக்கப்படுகின்றதோ அந்த நல்லறிவைத் தரவல்ல இதற்குப் பாஞ்சராத்ரம் என்று பெயர்.

रात्रयोगोचराः पंच शब्दादि विषयात्मिकाः ।
महाभूतात्मका वात्र पंचरात्रमिदं ततः ॥

अवाप्य तु परंतेजो यत्रैताः पंचरात्रयः ।
नश्यन्ति पंचरात्रं तत् सर्वाज्ञान विनाशनम् ॥

என்று விஷ்ணு ஸம்ஹிதையில் சொல்லப்பட்டிருக்கிறது.

(4) रात्रंच ज्ञानवचनं ज्ञानं पंचविधंस्मृतम् ।
तेनेदं पंचरात्रं हि प्रवदन्ति मनीषिणः ॥

என்று நாரத பாஞ்சராத்ரத்தில் கூறியபடி பர, வ்யூஹ, விபவ, அர்ச்சை, அந்தர்யாமி என்று ஐந்து விதமாக இருக்கின்ற பகவதவதாரங்களை ப்ரகாசிப்பிக்கையாலும், அபிகமந, உபாதாந, இஜ்யை, ஸ்வாத்யாயம், யோகம் என்ற க்ரமத்தில் நாளைப் பிரித்து பகவானுக்குப் பூஜை செய்யும் முறையை அறிவிக்கின்றதாலும் இதற்குப் பாஞ்சராத்ரம் எனப் பெயர் ஏற்பட்டது. இன்னும் பல ஸம்ஹிதைகளில் பலவாருகப் பெயர் வந்ததற்குக் காரணங்கள் காட்டப்பட்டிருக்கின்றன.

இப் பாஞ்சராத்ரம் ஆகம ஸித்தாந்தம், மந்த்ர ஸித்தாந்தம், தந்த்ர ஸித்தாந்தம், தந்த்ராந்தர ஸித்தாந்தம் என்று நான்கு விதமாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.

तच्चतुर्धा स्थितं शास्त्रं ऋगादिवदनेकधा ।
एकैकं भिद्यते तन्त्रं शाखाभेदेन भूयसा ॥

प्रथमं मन्त्र सिद्धान्तं द्वितीयञ्चागमाह्वयम् ।
तृतीयं तन्त्र सिद्धान्तं तुर्यं तन्त्रान्तरं भवेत् ॥

என்று பாத்ம ஸம்ஹிதையில், வேதத்தில் ரிக், யஜுஸ், ஸாம, அதர்வ என்ற பிரிவும், அந்தந்த வேதங்களில் அநேக சாகையும் எவ்வாறு சில பிரிவுகளுக்கென்று ஒதுக்கப்பட்டிருக்கின்றனவோ அவ்வாறே இந்த நான்கு ஸித்தாந்தங்களும் அவற்றின் பிரிவுகளான பல தந்த்ரங்களும் ஒதுக்கப்பட்டிருக்கின்றன என்று கூறப்பட்டிருக்கிறது. அதனால் இந்நான்கு பிரிவுகளில் சொல்லியபடி ஸம்ஸ்காரங்களைப் பெறுபவர்களான அதிகாரிகள் வெவ்வேறென்றும் அவரவர்கள் அந்தந்த ஸம்ஹிதையில் கூறியபடிதான் பூஜை முதலியவைகளைச் செய்ய வேண்டுமென்றும், வேறு ஸம்ஹிதையில் கூறியபடி செய்யக்கூடாதென்றும், இதிலில்லாத விஷயங்களை மற்றவைகளிலிருந்து எடுத்துக் கொள்ளலாமென்றும், ஒரு ஸம்ஹிதைப்படி ப்ரதிஷ்டை செய்யப்பட்ட பிறகு இடையில் வேறொரு பிரிவின்படி மாற்றக்கூடாதென்றும், ஆனால் பூஜையைத் தவிர மற்ற கைங்கர்யங்களான மாலாகரணாதிகளில் எல்லாருக்கும் எல்லாவிடத்திலும் அதிகார முண்டென்றும் ஷ பாத்மத்திலும், மற்றும் பல ஸம்ஹிதைகளிலும் விரிவாகக் கூறப் பட்டிருக்கிறது.

இச் சாஸ்த்ரத்தில் திவ்யம், ஆர்ஷம், மாநுஷம் என்ற பிரிவில் பல ஸம்ஹிதை கள் இருக்கின்றன. இதில் ஸாத்வதம், பௌஷ்கரம், ஜயாக்யம் என்ற மூன்று ஸம் ஹிதைகளும் நேரிடையாக பகவானால் அருளிச் செய்யப்பட்டதால் 'ரத்நத்ரயம்' என்று போற்றப்படுகிறது. முன்பு ஸாத்வதத்தின்படி திரு நாராயணபுரத்திலும், பௌஷ்கரத்தின் படி ஸ்ரீரங்கத்திலும், ஜயாக்யத்தின் படி ஸ்ரீ காஞ்சி தேவாதிராஜன் ஸன்னிதியிலும் பூஜை முதலியவை நடந்தன என்றும், பிறகு அததன் விரிவான ஈச்வரம், பாரமேச்வரம், பாத்மம் என்ற ஸம்ஹிதைகளிற் கூறியபடி பூஜை முதலியவை நடக்கின்றன என்று பெரியோர்கள் கூறுகின்றனர். மாநுஷப்ரதிஷ்டிதமான இடங் களில் திவ்ய சாஸ்த்ரத்தில் கூறியபடியும் பூஜை முதலியவை செய்யலாமென்று ஸ்ரீ தேசிகன் ஸ்ரீ பாஞ்சராத்ர ரக்ஷையில் நிர்ணயம் செய்திருக்கிறார். இதை அநுசரித்தே மயிலை ஸ்ரீ வேதாந்த தேசிகன் தேவஸ்தானத்தில் பாத்ம ப்ரகாரம் ப்ரதிஷ்டை செய்யப் பட்ட ஸ்ரீநிவாஸன் ஸன்னிதியில் பெரியோர்களின் ஆக்ஞைப்படி ஜயாக்ய ஸம்ஹிதை யில் கூறியபடி பூஜை முதலியவை இப்போதும் நடைபெற்று வருகின்றது.

இப் பாஞ்சராத்ரத்தின் எல்லா ஸம்ஹிதைகளும் சிதசிதீச்வர தத்வ பேதங்களை யும் அவற்றின் ஸ்வரூப ஸ்வபாவங்களையும் ஈச்வரன் தான் ஸ்வதந்த்ர சேஷி என்றும், மற்ற சேதநாசேதநங்கள் அவனுக்கு அடங்கியவையென்றும், கர்ம ஸம்பந்தத்தால் சேதநன் அநேக விதமான துக்கத்தை அடைகிறான் என்றும் அந்த துக்கமெல்லாம்

நீங்கி மோக்ஷத்தை அடைவதற்கு வழி ப்ரபத்தியே என்றும் ப்ரபத்தி செய்தபிறகு இங்கிருக்கும் காலத்தை வீணாக்காமல் ஒரு தினத்தை அபிகமநம், உபாதாநம், இஜ்யை, ஸ்வாத்யாயம், யோகம் என்று ஐந்து காலங்களாகப் பிரித்து,

यन्मुहूर्तं क्षणं वापि वासुदेवो न चिन्त्यते ।
साहानिः तन्महच्छिद्रं सा भ्रान्तिः सा च विक्रिया ॥

என்றபடி ஒரு க்ஷணமும் இடைவில்லாமல் பகவத் கைங்கர்யத்தைச் செய்து போவதே இந்த ஜீவாத்மாவுக்கு நல்லதென்றும், அந்த ஐந்து காலங்களில் ஒவ்வொரு காலங்களில் செய்ய வேண்டிய கார்யங்களினடைவையும் திவ்யம், ஆர்ஷம், மாநுஷம் என்று ஆலயத்தின் பிரிவுகளையும், அவைகளில் பகவானுடையவும், லக்ஷ்மீ முதலியோருடையவும், பரிவாரங்களுடையவும் ஆலய நிர்மாணம், ப்ரதிஷ்டை, பூஜை, உத்ஸவங்கள், ப்ராயச்சித்தம் அவைகளுக்கு வேண்டிய மந்த்ரங்கள், மந்த்ரங்களைக் கண்டுபிடிக்கக் கூடிய வழி, மந்த்ர ஸித்திகள் முதலிய பல விஷயங்களையும், ஒரு கலசம் முதல் ஸஹஸ்ர கலசம் வரை பகவானுக்குச் செய்யவேண்டிய அபிஷேக விதிகளையும், தீக்ஷை செய்து கொள்ள வேண்டிய முறைகளையும், இன்னும் அவசியமறிய வேண்டிய பிற பல விஷயங்களையும் சுருக்கமாகவும் விரிவாகவும், தெளிவாகவும் காண்பிக்கின்றன.



# கலைவாணி

"ரவீந்திரன்"

வித்தைக்கு அதிதேவதை சரஸ்வதி, அன்னை ஆதிபராசக்தியின் அம்சம், பிரம்ம பத்தினி. சரஸ்வதி என்ற சொல்லுக்கு ஒளிமிகுந்தவள் என்ற பொருள் உண்டு (சர் என்றால் நீர், ஸரஸ் என்றால் ஒளி) சப்தமாதாக்களில் ஒருவராக வைத்து வழிபடப்படும் சரஸ்வதி, "அம்பிதமே நதீதமே தேவிதமே சரஸ்வதி" என்று நதியாகவும் வழிபடப்படுகிறாள்.

சரஸ்வதியின் பிறப்பு புராணங்களில் பலவிதமாகக் கூறப்பட்டிருக்கிறது வாக்கு, அறிவு, கல்வி, கலை ஆகியவற்றின் அதிதேவதை சரஸ்வதி என்கிறது தந்திர சாஸ்திரம். ஆதிபராசக்தி சரஸ்வதி தேவியை தனது நாவிலிருந்து சிருஷ்டித்ததாக பிரம்ம புராணத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

புத்த மதத்தினரும் கலைமகளைத் தங்கள் கடவுளாகக் கருதி வந்தனர். இதை பௌத்த மதத் தந்திர நூல்கள் தெரிவிக்கின்றன. மஞ்ஜு ஸ்ரீ என்ற பெயரில் அவர்கள் சரஸ்வதியை வழிபடுகின்றனர். மகா சரஸ்வதி, வீணா சாரதா, என்ற சரஸ்வதி மூர்த்தங்கள் இவர்கள் வழிபாட்டுத் தெய்வங்கள் ஜைனர்களும் சரஸ்வதி வழிபாட்டைச் செய்து வந்துள்ளனர்.

சரஸ்வதி கையில் ஏந்தும் ஆயுதங்கள் பலவகையானவை. கலன்கள், பாசம், அங்குசம், வீணை, கமண்டலம், வஜ்ரம், அக்ஷமாலை ஆகியவை சில.

சரஸ்வதியின் வாகனம் மயில், இருப்பிடம் வெண்தாமரை. சில நூல்கள் அன்னப் பறவையிலும் சரஸ்வதி வீற்றிருப்பதாகக் கூறுகின்றன. பம்பாய், ராஜபுதனப் பகுதியில் மயூரவாகன சரஸ்வதியைக் காணலாம். ஆடுமேல் வீற்றிருக்கும் மேஷ வாகன சரஸ்வதி யாளி ஊர்தியில் (ஸிம்ஹ வாகனம்) காணலாம்.

சிருஷ்டிகர்த்தா பிரம்மா, ஞானசக்தி அல்லது அறிவுசக்தி இல்லாவிட்டால் சிருஷ்டித் தொழில் வெற்றிகரமாக நடக்காது. அதனால் தான் அறிவு சக்தியான 'சாரதா' வை பிரம்மா தனது மனைவியாக ஏற்றார் என்று கூறப்படுகிறது.

சரஸ்வதி வேதங்களின் தத்துவஸ்வரூபி
நாத ரூபமானதால்—வாணி
சகல கலா வல்லியாகையால்—பாரதி
வாக்காக விளங்குவதால்—வாங்மயி
அட்சர ஸ்வரூபமாக உள்ளதால்—பீஜாட்சர ஸ்வரூபிணி,

மந்திர தந்திர யந்திரமாகத்
திகழ்வதால்: ஸ்ரீ வாக்பவ கூட சதுர்வேத ஸ்வரூபிணி

—என்று பல பெயர்களால் கலைமகள் அழைக்கப்படுகிறாள்.

## நீல சரஸ்வதி

வித்தியா தேவதைகள் பதின்மரில் ஒருவளான தாரா சரஸ்வதியின் அம்சமே. தாராவில் ஐந்து விதங்கள் உண்டு. நீலதாரா, நீல சரஸ்வதி, உக்ரதாரா, சித்ர தாரா சகலதாரா என்று தாராஷ்டகம் என்ற ஸ்துதி கூறுகிறது. நீல சரஸ்வதி என்ற தாரிணி பேசும் சக்தியை அளிப்பவள். சகல மொழிகளின் ரூபமாகவும் இருப்பவள் நீல சரஸ்வதி என்றும் கூறுவார்கள்.

இவள் உபாசனைக்கான தீட்சை தர பெண்களே உரிமை பெற்றிருக்கிறார் கள். குழந்தை பிறந்த மூன்று நாட்களுக்குள் அதன் வாயில் தேனைக் கொண்டு நீல சரஸ்வதி மந்திரத்தை எழுதும் வழக்கம் காஷ்மீரில் இருந்தது. அங்கு காஷ்மீரி பண்டிட் என்ற வகுப்பினர் பாண்டித்தியம் மிக்கவர்களாக விளங்கினார்கள்.

## பாலா சரஸ்வதி

ஸ்ரீ வித்யையில் கணபதி மந்திரோபதேசத்திற்கு அடுத்தது பாலா உபதேசம். இது சரஸ்வதியின் ஸ்வரூபம்தான். பாலாதேவி கையில் ஜபமாலையும் புஸ்தகமும் கொண்டிருப்பவள். திருவாரூர் கமலாம்பாள் பாலா உருவம் கொண்டவள்.

## அஹிம்சா சரஸ்வதி

இந்த சரஸ்வதி வான்மீகியின் வாக்கில் குடிகொண்டு அருளியதால் தான் இப் பூவலகிற்கு ராமாயண காவியம் கிடைத்தது.

கூடிக் குலவி விளையாடிக் கொண்டிருந்த கிரௌஞ்சப் பறவைகளில் ஒன்றை வேடன் அம்பால் கொல்ல, துணையிழந்த பெண்பறவை துயரத்தால் கதறியது. அதைக் கண்ட வான்மீகி முனிவரின்வாக்கிலிருந்து வேடனுக்குச் சாபமிடும் சுலோகம் பிறந்தது. தம் சோகத்தினாலல்லவா இச்சுலோகம் வெளிப்பட்டது, என்று முனிபுங்கவர் வியந்த போது ரிஷியின் முன்னர் பிரம்மா தோன்றி ''நான் சொன்னபடி 'மாநிஷாத்' என்னும் அஹிம்சா சரஸ்வதி உம் வாக்கில் அவதரித்திருக்கிறாள். உலகில் அஹிம்சா தர்மம் தழைத்து, மக்கள் மேம்பாடடைய ராம காவியத்தை இயற்றி அருள்க'' என்று ஆசீர்வதித்து மறைந்தார்.

உலக மக்களுக்கு அழியாத இலக்கியம் கிடைத்தது.

## நித்தியா சரஸ்வதி

வேதம் ஆதி காலம் முதல் நம் நாட்டில் ஓதப்பட்டு வருகிறது. வேதம் காலத் திற்கு அப்பாற்பட்டது. வேதத்திற்கு நித்தியா சரஸ்வதி என்னும் ஒரு பெயரும் உண்டு.

## வாக்வாதினி

சக்தியின் எண்ணற்ற வடிவங்களில் வாக்வாதினி வடிவமும் ஒன்று. இவள் வித்தைக்கு அதிபதி. தலையில் இளம்பிறையுடன் வெள்ளைத் தாமரையில் அமர்ந்திருக்கும் இவள் எழுதுகோலும், புத்தகமும் ஏந்தியிருப்பாள்.

## அட்சர சுந்தரி

அம்பிகை வாக்ரூபமாக பிரகாசிக்கிருள். அம்பாள் உருவம் முழுவதும் அட்சரங்கள். இவ்வட்சர ரூபமுள்ள அட்சர சுந்தரியை ஆராதிப்பது சகல தேவதைகளையும் ஆராதித்தற்கொப்பாகும் என்று சரஸ்வதியோபநிஷத்தில் கூறப்பட்டுள்ளது.

## சரஸ்வதியின் இதர பெயர்களில் சில

ராஜமாதங்கி, சியாமளா, மந்திரிணி, வசிவேசானி.

## சரஸ்வதியின் சில கோலங்கள்

ஞான சரஸ்வதி கையில் வீணையில்லாமல் யோகத்தில் ஆழ்ந்திருக்கும் நிலை தஞ்சை பிருஹதீஸ்வரர் கோவிலில் காண்பவர்களது சிந்தனையைக் கவரும்.

## நர்த்தன சரஸ்வதி

பேலூர் (கர்நாடக மாநிலம்) நடன சரஸ்வதியின் நடனக் கோலம். ஒரு ஈடு இணையற்ற கலைப்படைப்பு- வேதமே சிலம்பொலியாக வீணையின் நாதம் வேதகீதம் இசைக்க, இசையைப் பருகும் துடிப்புடன் நடனமாடும் கலைவாணியின் கோலம் அற்புதமானது.

## ஹம்ச வாகனு

சரஸ்வதிக்கும் பிரம்மாவுக்கும் அன்னப் பறவை வாகனம். அன்னத்தை வாகனமாகக் கொண்ட சரஸ்வதியை வடநாட்டுக் கோவில்களில் காணலாம் தெய்வாம்சப் பொருந்திய பறவை அன்னம்.

## மயூர வாகனு

ராஜபுதன நாட்டுச் சிற்பங்களில் தோகை விரித்தாடும் மயில்மீது அமர்ந்துள்ள, சரஸ்வதியின் திருக்கோலத்தைக் காணலாம்.

வேத காலத்தில் சரஸ்வதி நதி தேவதையாக வணங்கப்பட்டிருக்கிருள் ''உலகத்தைக் காக்கும் தாய்களில் சிறந்தவள், தேவியர்களுள் சிறந்தவள், நதிகளுள் சிறந்தவள்'' என்று ரிக்வேதம் கலைவாணியைப் போற்றுகிறது.

## கலைவாணி சந்நிதிகள்

### சிருங்கேரி

கர்நாடக மாநிலத்தில் துங்கா நதிக்கரையில் ஆதிசங்கரர் சரஸ்வதி தேவியை வைத்து பீடம் அமைத்தது சிருங்கேரியில்.

ஸ்ரீ சாரதாதேவி சர்வாலங்கார ரூபிணியாய் இடதுகாலை மடித்து, வலது காலைத் தொங்கவிட்டு நான்கு கரங்களுடன் அழகும் அருளும் நிரம்பிய சாந்த மூர்த்தியாக காட்சித்தருகிருள். ஒருகரத்தில் அபயஸ்தம், ஒருகரத்தில் கிளி ஒரு கரத்தில் கலசம் மற்றகரத்தில் ஓலைச்சுவடியுடன் காட்சியளிக்கிருள் அன்னை சாரதாதேவி. இப்பீடம் வித்தையின் இருப்பிடமாகக் கருதப்படுகிறது. வியாக்கியான பீடத்தில் அம்பாளின் உத்ஸவமூர்த்தி இருக்கிறது. ஆதியில் சந்தனமரத்திலான இவ்வுற்சவ மூர்த்தியை விஜயநகர மன்னரின் மந்திரியான வித்தியாரண்யர் தங்கத்திலேயே செய்துவைத்தார். இன்றுள்ள உற்சவ மூர்த்தியே அது. சிருங்கேரி வித்தியாரண்யர் ஆலயத்தில் சரஸ்வதிக்கு தனிசந்நிதி உண்டு.

## கூத்தனூர

தமிழ்நாட்டில்உள்ள பூந்தோட்டத்தினருகிலுள்ள கூத்தனூரில் கலைவாணிக்குத் தனிக்கோவில் உள்ளது. கலைமகள்கிழக்குமுகமாக பத்மயோகாஸனத்தில் அமர்ந்திருக்கிருள். அருகே அரசலாறு ஓடுகிறது. பிரம்மதேவனைமணக்க சிவனைக்குறித்து சரஸ்வதி கடுந்தவம் புரிந்த இடம் என்று கூறப்படுகிறது. அன்னை ஜபமாலை, கமண்டலம், புஸ்தகம், ஞானமுத்திரை தாங்கி காட்சி தருகிருள்.

## ஔவைக் கோவில்

ஔவையார் சரஸ்வதி தேவியின் அவதாரம் என்று கூறப்படுகிறது. தமிழுக்காகவே வாழ்ந்து சேவை செய்த ஔவையாருக்கு இன்று தமிழ் நாட்டிலே கோவில் இல்லை. கேரள மாநிலத்தில் அறுவாமொழிக் கோட்டையினருகில் உள்ள ஒரு சிறு கிராமத்தில் ஔவைக்கு ஒரு கோவில் இருக்கிறது. இக்கிராமத்தின் பெயரே ஔவைக் கோயில்.

இக்கிராமத்தில் தமிழ் புத்தாண்டு தினம் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. வித்தியாரம்பம், கலை அரங்கேற்றம் போன்ற நிகழ்ச்சிகள் அன்று நடைபெறும்.

## பாஸாரா சரஸ்வதி

ஆந்திர மாநிலம் அடில்லாபாத் மாவட்டத்திலுள்ள பாஸாரா என்ற இடத்தில் கலைவாணிக்கு ஒரு ஆலயம் உள்ளது. அருகே கௌதமி நதி ஓடுகிறது. வியாச முனிவர் இங்கு தங்கி, கோவில் கொண்டுள்ள சரஸ்வதியை வழிபட்டார் என்று கூறப்படுகிறது.

## கடல் கடந்த சரஸ்வதி

ஜாவா, ஜப்பான், பாலி போன்ற தேசங்களிலும் சரஸ்வதி வழிபாடு செய்யப்படுகிருள்.

பாலித் தீவில் மலைகளுக்கிடையே உள்ள ஒரு பள்ளத் தாக்கில் தம்பாக் ஸைரிங் என்ற புனித குளம் ஒன்று உள்ளது. விஜயதசமி தினத்தன்று அத்தீவு மக்கள் இக்குளத்தில் நீராடி, புத்தகங்களைத் தொழுது, மஞ்சள் நிற அன்னம் சமைத்து நைவேத்தியம் செய்கிருர்கள்.

ஜப்பானியர்கள் சரஸ்வதியை பென்—டென் என்று அழைத்து வழிபடுகிருர்கள். ஜப்பானியர்களுக்கு ஏழு தெய்வங்கள் உண்டு. அவைகளில் பென் டென்தான் பெண் தெய்வம். வீணை புத்தகம் பென்—டென் கைகளில் இருக்கிறது. இந்தியர்களைப் போலவே கொலு வைத்து பூஜை செய்து ஆண்டுதோறும் மார்ச் மாதம் 3ம் நாளன்று இவ்விழாவை ஜப்பானியர்கள் கொண்டாடுகிருர்கள்.

திபெத் நாட்டில் சரஸ்வதியை யங்சனம என்ற அழைக்கிருர்கள். சலவைக் கல்லால் உருவம் அமைத்து வழிபடுகிருர்கள்:

வாக்கிற்கு தேவதையான சர்ஸ்வதியை எப்படி வழிபடவேண்டும் என்று மகா கவி சுப்பிரமணிய பாரதியார் பின் வரும் பாடலில் கூறுகிருர்:

மந்திரத்தை முணுமுணுத்து
ஏட்டை வரிசையாக அடுக்கி அதன்மேல்
சந்தனத்தை மலரை இடுவோர்
சாத்திரம் இவள் பூசனை அன்ரும்
வீடுதோறும் கலையின் விளக்கம்
வீதிதோறும் இரண்டொருபள்ளி
நாடுமுற்றிலும் உள்ளன ஊர்கள்
நகர்கள் எங்கும் பலபல பள்ளி
தேடுகல்வி இலாதோர் ஊரைத்
தீயினுக்குரையாக படுத்தல்
கேடுதீர்க்கும் அமுதம் என் அன்னை
கேண்மை கொள்ள வழி இவைகண்டீர்.

இந்த நவராத்திரி காலத்தில் மட்டுமில்லாது நாள்தோறும் சகலகலாவல்லியிடம் நம் அறிவுத் திறன் பெருகி, வாக்கில் சத்தியம் நிலவி வாழ்வு வளம்பெற வேண்டி, வழிபட்டு நற்பயன் பெறுவோம்.






SAA/LM/1887 R

COVER PRINTED BY VALLIMAYIL OFFSET PRINTERS MADRAS-21